அனைத்திந்திய வரலாறு வரிசை

# ஞானக் கவி
# ராமலிங்கர்

புரசு பாலகிருஷ்ணன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஊக்குவிப்பாளர் -விற்பனையாளர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41 - பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 600 098.

1991 (சக 1913)



ரூ. 21.00

Title : Gnanakkavi Ramalinga (Tamil)

வெளியிட்டவர்: டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட்,
இந்தியா, ஏ-5, கிரீன் பார்க், புதுதில்லி - 110 016.

# அஞ்சலி

நிசமா?
அடிகள் இங்கிருந்தாரா?
இங்கு வாழ்ந்தாரா?
இங்கு நடந்தாரா?
நான் நிற்கும்
இந்தத் தெருவிலா?
இந்தச் சென்னையிலா?

நிசமா?
இந்த கந்த கோட்டமா
அவர் பசித்துத் திரிந்து
முதலில் பாடிய இடம்?
பாய்க் கடையும் பழக் கடையும்
பரபரப்பும் சச்சரவும்
நெருக்கும் இங்கேதான்
வள்ளலார் வளர்ந்தாரா?

நிசமா?
அருட்பெருஞ்சோதியின்
தனித்திரு தனயன்
இங்கிருந்தாரா?
வீராச்சாமி பிள்ளைத் தெரு
ஏழ கிணற்றுக் கருகில்
இங்குறைந்தாரா?
இங்கிருந்து

தினம் ஒற்றியூருக்கு
தனிமை நாடி
நடந்தாரா?

நிசமா! ஆமாம்!
நான் நிற்கும் இடத்துலே
இந்தச் சென்னையிலே
ஒரு புத்தர் இருந்தார்! —
கருணையின் வடிவம்!
கபில வஸ்துவிலில்லை —
மருதூரில் பிறந்தார்!
காசி போக வில்லை —
சென்னை வந்தார்!

நேற்றுதான் இருந்தார் —
என்றோ ஏதோ
பழங்காலத்திலில்லை!
ஒரு நூற்றாண்டு முன் தான்
இந்த அருளொளி தீபம்
நம்மிடை நடந்தார்!
நாட்டில்
ஞான ஒளி பரப்பினார்!

# குறிப்புகளும் நன்றியுரையும்

'Ramalinga, Poet and Prophet' எனும் எனது ஆங்கில நூல் கி.பி. 1984—ம் ஆண்டில் நேஷனல் புக் டிரஸ்ட் வெளியீடாக வந்தது. அந்நூலின் தமிழ் வடிவம் தான் இது. இதுவும் ஒரு மூல நூல் போலத்தான். ஆங்கில வடிவத்தின் சுருக்கம் ஜர்னல் ஆஃப் ஸௌத் ஏஷியன் லிட்டரெச்சர், மிசிகன், யூ.எஸ். ஏ. (Journal of South Asian Literature, Michigan, U.S.A. XIX, 2, 1984) இதழில் வெளிவந்தது. அதன் ஆசிரியருக்கு என் நன்றி.

நூலைத் தமிழில் எழுதுவதில் ஒரு வசதி இருக்கிறது. அதாவது, அடிகளிலிருந்து எடுத்துக் காட்டும் மேற்கோள்களை அவர்கள் அருளியபடியே கொடுப்பது சாத்தியம். ஆங்கில நூலில் நான் அவற்றை ஆங்கிலப் படுத்தித் தந்தேன்.

இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள சமஸ்கிருத மேற்கோள்களின் தமிழாக்கம் நான் செய்தது. மேலும் சேர்த்துள்ள ஆங்கிலக் கவி டென்னிஸனின் கவிதை ஒன்றின் தமிழாக்கமும், நூல் முகத்தில் நிற்கும் 'அஞ்சலி'யின் ஆங்கில நூலில் வெளியான என் ஆங்கிலக் கவிதையின் தமிழாக்கமும் என்னுடையவை. இந்நூலை எழுதுவதில் நான் சன்மார்க்க தேசிகன் எனும் ஊரன் அடிகளின் 'இராமலிங்க அடிகள் வரலாறு' என்னும் அருமையான புத்தகத்தைப் பெரும் அளவில் பயன் படுத்தியிருக்கிறேன். அவருக்கு என் இதய பூர்வமான நன்றி. (அவருடைய புத்தகம் 1971—ம் ஆண்டில், சமயபுரம், வடலூர் அஞ்சல்கள் கொண்ட சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையத்தால் வெளியிடப் பட்டது.) மற்றும் சில நூல்களும் எனக்கு உதவியாய் இருந்தன.

இந்நூலை எழுதும்போது நான் பயன்படுத்திய 'திருவருட்பா'வின் பதிப்பு '36 சாமிபிள்ளைத் தெரு, சூளை, சென்னை' என்ற முகவரி கொண்டு 1932—ம் ஆண்டில்

வெளியான சமரச சுத்த சன்மார்க்க சங்க வெளியீடு. அவர்களுக்கும் என் நன்றி.

புரசு பாலகிருஷ்ணன்

# அடக்கம்

# அத்தியாயம் 1

## ராமலிங்கரின் காலம்

சிதம்பரம் ராமலிங்க அடிகள் தோன்றிய காலம் இந்தியாவில் அரசியல் விழிப்புணர்ச்சியும் ஆன்மீக—கலாசாரத் துறைகளில் மறுமலர்ச்சியும் தோன்றத் தொடங்கியிருந்த காலம். அவர் தமிழ்நாட்டில் 1823—ல் மருதூர் கிராமத்தில் அவதரித்த சமயம் வங்காள மறுமலர்ச்சியாளர் ராஜா ராம் மோகன் ராய்க்கு நாற்பத்து ஒன்பது வயது. அவர் பிரும்ம சமாஜத்தை நிறுவ ஐந்து ஆண்டுகள் இருந்தன. பின்னுட்களில் சமாஜத்திற்குத் தலைவராய் வந்த தேவேந்திரநாத் தாகூருக்கு அப்பொழுது ஆறு வயது. பம்பாயில் 1875—ல் ஆரிய சமாஜத்தை நிறுவிய தயானந்த சரஸ்வதி, ராமலிங்கர் பிறந்த அடுத்த ஆண்டில் பிறந்தார். ராமலிங்கர் மறைந்த அடுத்த வருஷம் சமாஜத்தை நிறுவினுர். ராமலிங்கரின் பத்தொன்பதாம் வயதில் தோன்றிய மகாதேவ கோவிந்த் ரானடே 1867—ல் பம்பாயில் பிரார்த்தனை சமாஜத்தை நிறுவினுர். ராமலிங்கருக்குப் பதிமூன்று வயதாகும் பொழுது, வங்காளத்தில் கமர்புகூர் கிராமத்தில் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தோன்றினுர். 1875—ல், அதாவது ராமலிங்கர் மறைந்த அடுத்த ஆண்டில், அமெரிக்காவில் பிளாவட்ஸ்கி அம்மையாரும் கர்னல் ஆல்காட்டும், நியூயார்க்கில் பிரம்ம ஞான சபையை (Theosophical Society) நிறுவினர். இச்சபையின் வருகையை, தாம் மறையும் முன்பு 1874 ஜனவரியில் முன்னறிவித்த ராமலிங்கர் தம் வாழ்வின் முதல் முப்பத்தி நான்கு ஆண்டுகளைக் கழித்த சென்னைக்கு இந்த சபை ஏகியது முற்றும் பொருத்தமே. இந்தப் பொருத்தம் மேலும் நிறைவு படும் முறையில் ராமலிங்கர் 1865—ல் வடலூரில் சமரச வேத சன்மார்க்க சங்கத்தை நிறுவினுர். இந்தச் சங்கம், இதற்குப் பத்து வருஷங்களுக்குப் பிறகு நியூயார்க்கில் நிறுவப்பட்ட

சங்கத்தின் தத்துவமான பிரம்மஞானத்தின் முதிர்ச்சி எனலாம். 'துரிய பிரம்மஞானத்தை அருட்பா அளிக்கிறது', என்கிறார் சுத்தானந்த பாரதி. இந்தச் சோதி அறிவை சாத்திர மதக் கோட்பாடுகளிலிருந்து விடுவிக்க வேண்டி, ராமலிங்கர் சங்கத்தின் பெயரை சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்று பின்னர் மாற்றி அமைத்தார்.

கவியும் ஞானியுமான திரு ராமலிங்க அடிகளைப் புரிந்து கொள்ள அவருடைய புறவாழ்க்கைத் தகவல்கள் மட்டுமன்றி, மக்களிடையே அவருடைய தெய்வீகத் திறன்கள் அல்லது சாதனைகள் தொடர்பாக நிலவி வருகின்ற நாடோடிக் கதைகளையும் அறிந்து கொள்ளுதல் அவசியம். ஏனெனில் ஒரு மகான் தனது காலகட்டத்து மக்களை எந்த அளவு வசீகரித்தார், எந்த அளவு அவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டார் என அறிவிப்பவை இத்தகைய கதைகள் தான். எனவே இந்நூலில் வெறும் தகவல்களோடு இத்தகைய கதைகளும் சேர்த்தே தரப்பட்டுள்ளன.

# அத்தியாயம் 2

# பிறப்பு

அருட் பிரகாச வள்ளலார் எனப்படும் ராமலிங்க சுவாமிகள் சிவானந்தத் தாண்டவப் பெருமை சேர்ந்த சிதம்பரத் தலத்திற்குச் சுமார் பதினைந்து கிலோமீட்டர்கள் வடமேற்கில் உள்ள மருதூர் கிராமத்தில் 1823–ம் ஆண்டு அக்டோபர் மாதம் 5–ம் தேதி பிறந்தார். அவருடைய தந்தை ராமய்யபிள்ளை வேளாண்குலம், கருணிகர் மரபு, சைவ சமயம். கிராமக் கணக்கராயும் பிள்ளைகளுக்குக் கணக்காயராகவும் இருந்தார். தாய் சின்னம்மை செங்கற்பட்டு மாவட்டத்தில், பொன்னேரிக்கருகில் உள்ள சின்னகாவணம் என்ற கிராமத்தைச் சார்ந்தவர். ராமய்யபிள்ளையின் மனைவியர் ஐவர் ஒருவர் பின் ஒருவராக, பிள்ளைப் பேறின்றி இறக்கவும், சின்னம்மை அவருக்கு ஆறும் மனைவியாய் வாய்த்தார். தம்பதிகளுக்கு சபாபதி, பரசுராமன் என்று இரு பிள்ளைகளும், உண்ணுமுலை, சுந்தரம் என்ற இரு பெண்களும் பிறந்தனர். ராமலிங்கர் ஆறும் பேறு. சிவனடியார் ஒருவர் ராமய்ய பிள்ளையின் வீட்டிற்கேகி, அம்மையார் கருவுற்றிருந்த குழந்தை உலகை உய்விப்பதற்குத் தோன்றிய ஒரு பெரும்பேறு என்று உணர்த்தியதாகச் சொல்லப் படுகிறது. இதைக் கூறிய பின் சித்தர் வீட்டு வாயிலைத் தாண்டிச் சில அடிகள் கடந்தபின் மறைத்து விட்டதாகவும் சொல்லப்படுகிறது.

ராமலிங்கர் ஆறு மாதக் குழந்தையாக இருந்தபோது தந்தை காலமானார். இரண்டு மாதங்களில் தாயார் குடும்பத்துடன் தம் பிறந்த ஊராகிய பொன்னேரிக்குச் சென்றார். குழந்தையின் ஐந்தாம் திங்களிலே நடராசப் பெருமானைத் தரிசனம் செய்ய குடும்பத்தினர் சிதம்பரத்திற்குச் சென்றனர். கைக்குழந்தை ராமலிங்கர் சிதம்பர ரகசியத்தைத் தரிசித்தார், தரிசித்த ரகசியம் மெய்யென உணர்ந்தார்.

தெய்வத்தின் அருவ வெளியை, திரை விலகத் தோன்றிய சிறு வெளியில், கண்டார். இதை வியந்து உவப்புடன் பின்னர் அவர் பெருமானுக்குப் பாமாலை அணிவிக்கிறார்.

தாய்முதலோ ரொடுசிறிய பருவமதில் தில்லைத்
தலத்திடையே திரை தூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேல் காட்டாதே என்றனுக்கே எல்லாம்
வெளியாகக் காட்டியென் மெய் உறவாம்
பொருளே
காய்வகைஇல் லாதுளத்தே கனிந்த நறுங் கனியே
கனவிடத்தும் நனவிடத்தும் எனைப்பிரியாக்
களிப்பே
தூய்வகையோர் போற்றமணி மன்றில் நடம் புரியும்
சோதி நடத் தரசேஎன் சொல்லும் அணிந்
தருளே.

இந்தப்பாட்டில் அடிகள் தாயை மாத்திரம் சிறப்பாய்க் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.

அடிகள் தம் நாற்பத்தொன்பதாம் அகவையில் சத்திய ஞான சபையில் ஏழு திரைகளுக்குப் பின் விளக்கிய அருட்பெருஞ்சோதியிலும் அவர் தம் குழவிப்பருவத்தில் கண்ட சிதம்பர ரகசியத்தைக் காண்கிறோம்.

# அத்தியாயம் 3

## குழந்தைப் பருவம்

பொன்னேரியிலிருந்து ஓராண்டில் (1824–ல்) சின்னம்மையார் தம் மக்களுடன் சென்னையில் குடியேறினர். அங்கு அவருடைய மூத்த பிள்ளையான சபாபதிபிள்ளை பிரபல வித்வானாய் புராணப் பிரசங்கங்கள் செய்து, குடும்பத்தைப் பராமரித்து வந்தார். அவர்கள் வசித்த இடம் ஏழு கிணற்றுக்குச் சமீபத்தில் வீராசாமிப் பிள்ளைத் தெருவில் 39–ம் எண் கொண்ட வீடு.

அவருடைய பச்சிளம் பருவத்தைப் பின் வரும் பாடல் படம் பிடித்துத் தருகிறது.

ஓங்கிய ஓர் துணைஇன்றிப் பாதிஇர வதிலே
உயர்ந்த ஒட்டுத் திண்ணையிலே படுத்தகடைச் சிறியேன்
தூங்கி மிகப் புரண்டுவிழத் தரையில் விழா தெனையே
தூக்கி எடுத் தணைத்துக் கீழ் கிடத்தியமெய்த் துணையே
தாங்கிய என் உயிர்க்கின்பம் தந்தபெருந் தகையே
சற்குருவே நான் செய்பெருந் தவப் பயனும் பொருளே
ஏங்கிய என் ஏக்கம் எலாம் தவிர்த்தருளிப் பொதுவில்
இலங்கு நடத் தரசே என் இசையும் அணிந் தருளே.

இராமலிங்கரின் ஐந்தாம் பருவத்தில் அவருடைய தமையனார் சபாபதிப்பிள்ளை அவருக்குத் தாமே கல்வி புகட்டத்

தொடங்கினர். ஆனல் ராமலிங்கரின் மனது படிப்பில் செல்லவில்லை. அவர் தம் விருப்பப்படி அருகில் இருந்த கந்தசாமிக் கோவில் பிரகாரங்களில் அலைந்தவாறும், தெருக் கூட்டங்களில் சேர்ந்து, நடக்கும் பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டும், பொழுது போக்கி வந்தார். ஒரு நல்ல ஆசிரியரின் பொறுப்பில் விட்டால் தம்பி திருந்துவான் என நினைத்த தமையனர், தம் ஆசிரியரான காஞ்சிபுரம் மகா வித்துவான் சபாபதி முதலியாரிடம் தம்பியைக் கல்வி பயில விட்டார். அதுவும் சரிப்படவில்லை. பிள்ளைப் பெருமான் ஒழுங்காய்ப் படியாமல் இருந்தாலும், கோவில் குளங்களைச் சுற்றியிருந்த மக்களைத் தம் பேச்சாலும் பாட்டாலும் ஈர்த்தவாறு இருந்தார். இதைக் கண்ட சபாபதி முதலியாரும் ராமலிங்கருக்குப் பாடம் சொல்லித்தருவதை விட்டு விட்டார். தமையனர் பொறுமை இழந்தார். தம் மனைவியார் பார்வதியிடம், பிள்ளைப் பெருமானுக்கு அன்று தொட்டு உணவும் உடையும் ஏதும் அளிக்கக் கூடாது என்றும், வீட்டிற்குள் நுழையவும் விடக் கூடாது என்றும் கண்டிப்பான உத்தரவு போட்டார். ஆயினும் அவ்வம்மையார் கணவருக்குத் தெரியாமல், அவர் உறங்கும் பொழுதோ, வீட்டில் இல்லாத சமயத்திலோ, பிள்ளைப் பெருமானைப் புழக்கடை வழியே வரவழைத்து, அவருக்கு அன்புடன் உணவளித்து, அறிவுரைகள் கூறினர். தம்பொருட்டாவது தமையனரின் சொற்படிந்து கல்வி பயிலும்படியாகக் கண்ணீருடன் கேட்டுக் கொண்டார். அவரும் அதற்கு இணங்கினர். தாம் ஒழுங்காகக் கல்வி பயிலுவதாக ஒப்புக் கொண்டு, தமக்கு இதற்கென மெத்தையிலுள்ள ஓர் அறையை விட்டு விடும்படியாகக் கேட்டுக் கொண்டார்.

இந்த வேண்டுகோள் அங்கீகரிக்கப் பட்டது. ராமலிங்கர் வீட்டில் தங்கினர். வீட்டிற்கு வெளியே அடி வைக்கவில்லை. அறைக்கு வெளியே கூட வராமல் பல தினங்களை அறைக்குள்ளேயே கழித்தார். இவ்விளம் பிராயத்தில், அனுதரவாய் உணர்ந்து சாமியாராகப் போகும் வேட்கை

அவருள் உண்டாகியிருந்த ஒரு சந்தர்ப்பத்தில் பாடப்பட்டதாகத் தோன்றுகிறது பின் வரும் பாடல்.

ஐயநான் ஆடும் பருவத்திற் றுனே
அடுத்தநன் னேயனே டப்பா
பொய்யுல காசை எனக்கிலே உனக்கென்
புகல் என அவனும் அங் கிசைந்தே
மெய்யுறத் துறப்போம் என்றுபோய் நினது
மெய்யருள் மீட்டிட மீண்டோம்
துய்யநின் உள்ளம் அறிந்ததே எந்தாய்
இன்றுதான் சொல்லுவ தென்னே.

தமக்கு ஒத்த சிறு நண்பன் ஒருவனுடன் ராமலிங்கச் சிறுவன் சிறிது காலம் துறவு பூண்டு வெளியேறினதாகவும், பிறகு அது சரியன்று என உணர்ந்து வீடு திரும்பியதாகவும் இந்த செய்யுளிலிருந்து தெரிகிறது. இந்தப் பாடலில் அவர் மெய்யருளை 'எந்தாய்' என்று குறிப்பிடுவது நோக்கத் தக்கது. இச்சொல்லில் அவர், தமக்கு உணவும் உடையும் அன்பும் அளித்த தம் அண்ணியார் உருவில் இறைவன் தம்மைக் காத்ததாகக் குறிப்பிடுகிறார் போலும். மேலும் இந்தப் பாடல் சித்திரிக்கும் பச்சைப் பிராய அனுபவம், அடிகளுடைய பிற்கால வாழ்வில் அவர் பசியை 'பசித்தீ', 'பசிநோய்', 'பசிப்பிணி' என்று பலவாறு வர்ணிப்பதையும், அதனல் அவருக்கு ஏற்பட்ட கனிந்த ஜீவ காருண்யத்தையும் ஒருவாறு விளக்குகிறது.

# அத்தியாயம் 4

# இளம்பிள்ளைப் பருவம்

நாள்தோறும் மூடிய கதவிற்குப் பின் அந்த மெத்தை அறையில் தனித்திருந்த ராமலிங்கர் நாள் முழுவதும் என்ன செய்து கொண்டிருந்தார், எவ்விதம் பொழுது போக்கினுர் என்று ஒருவருக்கும் தெரியாது. வீட்டிற்குள் சிறியவன் இருக்கிருன் என்று திருப்தி அடைந்தனர். அந்தத் திருப்தியைத் தாண்டி தமையனுர் யோசனை செய்யவில்லை. ராமலிங்கர் அறையில், சுவரின் மேல் சாய்ந்தவாறு ஒரு நிலைக் கண்ணுடியை அமைத்தார். அதன் எதிரில் ஒரு தீபத்தை வைத்தார். அமர்ந்து கொண்டு, கண்ணுடிக்குள் பிரதிபலித்த தீபத்தில் மனத்தை ஊன்றி நிஷ்டையில் அமர்ந்தார். மனம் ஞானப் போக்கில் நிலைத்து நிற்பதற்கு, அடிகள் நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு நிறுவிய சத்திய ஞான சபையில் இதே சாதனங்களைக் கையாண்டார். கண்ணுடிக்குள் தீபம் போல், அகத்திற்குள் அருட் பெருஞ்சோதியை நிறுத்த வேண்டும், அதனுடனே உறைதல் வேண்டும் என்பது அடிகளின் தத்துவம்.

துரிய மேற்பர வெளியிலே
 சிச் நடம் புரியும்
பெரியதோர் அருட்ஜோதியைப்
 பெறுதலே யெவர்க்கும்
அரிய பேறு. மற்றவையெல்லாம்
 எளியவே யறிமின்
உரிய இம்மொழி சத்தியம் உலகீர்!

இந்த இளம் பிராயத்திலேயே அடிகள் பாமாலை தொடுத்துப் பாடத் தொடங்கி விட்டார். அவருடைய மொழிகளே இதற்குச் சான்று.

உருவத்திலேசிறியேனாகி யூகத்திலொன்று மின்றித்
தெருவத்தி லேசிறு கால்வீசி யாடிடச் சென்ற
அந்தப்
பருவத்தி லேநல் அறிவளித் தேஉளைப் பாடச்
செய்தாய்
அருவத்தி லேஉரு வானேய்நின் தண்ணளி
யார்க்குளதே.

வீதியிலே விளையாடித் திரிந்தபிள்ளைப் பருவம்
மிகப்பெரிய பருவம்என வியந்தருளி அருளாம்
சோதியிலே விழைவுறச்செய் தினியமொழி மாலை
தொடுத்திடச்செய் தணிந்துகொண்ட
துரையே....
தெருவிடத்தே விளையாடித் திரிந்தஎனை வலிந்தே
சிவமாலை அணிந்தனைஅச் சிறுவயதில்....

தீபம் உள்ளடங்கிய கண்ணுடிமுன் அமர்ந்து, ஞான விசாரத்தில் இறங்கிய ராமலிங்கப் பாலகனுக்கு கண்ணுடியினுள்ளே ஞானக் கடவுளான தணிகைவேலன் காட்சி அளித்தார் எனக் கூறுவர். அடிகள் பாடுகிருர்.

சீர் கொண்ட தெய்வ
வதனங்களாறுந் திகழ்கடப்பந்
தார் கொண்ட பன்னிரு
தோள்களுந் தானரைத் தாள்களும் ஓர்
கூர் கொண்ட வேலும் மயிலும்

நற்கோழிக் கொடியுமருட்

கார்கொண்ட வண்மைத்

தணிகாசலமும் என் கண்ணுற்றதே.

தனிமெத்தை அறையில் அடிகள் அனைத்தையும் தாமே, எவரும் ஓதாதுணர்ந்தார்.

இங்ஙனம் அவரே பல இடங்களில் கூறுகிறார்:

ஓதாதுணர்ந்திட ஒளிஅளித் தெனக்கே

ஆதாரமாகிய அருட்பெருஞ் ஜோதி.

சத்தியப் பெரு விண்ணப்பத்தில் 'தனித்தலைமை'க் கடவுளுக்கு நன்றி கூறுகிறார்:

குமாரப் பருவத்தில் என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரையின்றியே என்றரத்திற் பயின்றறிதற் கருமையாகிய கல்விப் பயிற்சியை எனதுள்ளகத்தே யிருந்து பயிற்றுவித்தயருள்னீர்.

அடிகள் முதலில் பாடிய பாமாலை 'தெய்வமணிமாலை'; சென்னை கந்தகோட்டத்து (கந்தசுவாமி கோவில்) முருகனைப் பற்றியது. அப்பொழுது அவருக்கு வயது ஒன்பது. முதலாக அச்சேறிய அவருடைய பாடலும் இதுவே. 1851–ம் ஆண்டுக்கு முன் இது அச்சானது எனக் கருதப்படுகிறது. இது இன்றும் பெரிதும் பாடப்படுகிறது. இம் முப்பத்தொரு பாடல்களில் ஒன்று பின்வருமாறு:

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற

உத்தமர்தம் உறவுவேண்டும்

உள்ஒன்று வைத்துப் புறம்பொான்று பேசுவார்

உறவுகல வாமை வேண்டும்

பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்

டும்பொய்மை

பேசா திருக்க வேண்டும்

பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத மானபேய்

பிடியா திருக்க வேண்டும்

மருவுபெண் ஆசையை மறக்க வேண்டும் உனை

மறவாதிருக்க வேண்டும்

மதி வேண்டும் நின் கருணை நிதி வேண்டும் நோயற்ற

வாழ்வில்நான் வாழவேண்டும்

தருமமிகு சென்னையில் கந்தகோட்டத்துள் வளர்

தலம் ஓங்கு கந்த வேளே

தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி

சண்முகத் தெய்வமணியே.

# அத்தியாயம் 5

# அகவை ஒன்பது முதல் பன்னிரண்டு வரை

வீடு திரும்பிய தம்பியைத் தமையனார் சபாபதிப் பிள்ளை சீக்கிரமே தமக்கு உதவுகோலாக்கிக் கொண்டார். ஒரு சமயம் அவருடைய புராண விரிவுரைகளுக்குக் கையேடு வாசிக்கும் உறவுப் பெண் நோயுற்றாள். அவளுக்குப் பதிலாக ராமலிங்கர் தம் தமையனாருடைய பிரசங்கத்திற்கு ஏடு வாசிக்க நேர்ந்தது. அவருடைய குரலும் வாசிப்பும் கேட்போருடைய மனத்தைக் கொள்ளை கொண்டன. அன்று முதல் அவரே ஏடு வாசிக்க வேண்டும் என்று அனைவரும் கேட்டுக்கொள்ள, அங்ஙனமே ஏற்பாடாயிற்று.

ஒரு நாள் சபாபதி பிள்ளைக்கு சென்னை முத்தியாலுப் பேட்டையில் இருந்த செல்வந்தர் சோமு செட்டியார் வீட்டில் திருஞான சம்பந்தர் புராணத்தைப் பற்றிய பிரசங்கம் செய்ய வேண்டியிருந்தது. அன்று அவர் கடுங் காய்ச்சலில் வீழ்ந்தார். ஆகவே அவர் தாம் பிரசங்கம் செய்ய முடியாமையைச் செட்டியாருக்குத் தெரிவிக்கும் படியாக ராமலிங்கரை அனுப்பினார். ராமலிங்கர் அங்கே சென்ற பொழுது, சபை கூடித் திரண்டு இருந்தது. சோமு செட்டியார் ஏமாற்றம் அடைந்தது கண்டு, சபையோர்களில் சிலர் ராமலிங்கரை, அவருடைய தமையனாருக்குப் பதிலாகப் பிரசங்கம் செய்யும்படியாகக் கேட்டுக் கொண்டனர். ராமலிங்கர் சம்மதித்தார். அவர் தம் தனி அறையை விட்டு வெளியேறிய பிறகு பேசிய முதற் பேச்சு அது. திருஞான சம்பந்தர் அவருடைய ஞானகுரு. கையில் ஏடு எதுவுமில்லாமல், குறிப்பு ஏதுமில்லாமல், பேசத் தொடங்கினார். சொற்கள் பொருள் செறிந்து, அருள் செறிந்து, ஓசை நயம் செறிந்து,

பெருக்கெடுத்து ஓடின. சபையோர் அந்த அமுதவலையில் சிக்குண்டனர். அன்று தொட்டு அவரே புராணப் பிரசங்கங்கள் செய்ய வேண்டும் என்று சபையோர்கள் சபாபதியிடம் கேட்டுக் கொண்டனர். சபாபதியும், தம் தம்பியாருடைய பெருமையை உணர்ந்து, அதற்குச் சம்மதித்து, தாம் பிற இடங்களில் பிரசங்கம் செய்யத் தொடங்கினர்.

**1832–ல்,** தம் ஒன்பதாம் அகவையில், ராமலிங்கர் இறைவனின் அருளாட்சியைப் பெற்றார். இதை அவரே தம் பாடலில் குறிப்பிட்டிருக்கிறார்:

வேண்டாமை வேண்டுகின்றோர் நிற்க மற்றை
வேண்டுவார் வேண்டுவன விரும்பி நல்கும்
தூண்டாத மணிவிளக்கே பொதுவி லாடும்
சுடர்க் கொழுந்தே என்னுயிர்க்குத் துணையே
என்னை
ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டுகொண்ட
அருட்கடலே என் உள்ளத் தமர்ந்த தேவே
ஈண்டாவ எனச்சிறிய அடியேன் உள்ளத்
தெண்ணம் அறிந் தருளாயேல் என்செய் கேனே.

அவருடைய பன்னிரண்டாம் அகவையில் அவருடைய ஆத்மப் போரும், அது சுட்டும் ஞான வாழ்வும் தொடங்கின:

பனிரண் டாண்டு தொடங்கி யிற்றைப்
பகலின் வரையு மே
படியிற் பட்ட பாட்டை நினைக்கின்
மலையுங் கரையு மே
ஈரா றுண்டு தொடங்கியிற்றைப்
பகலின் வரையு மே

எளியேன் பட்ட பாட்டை நினைக்கி
லிரும்புங் கரையு மே.

ஊனின் தேவைகளை உதறி, ஆன்மீகப் போரில் இறங்கிய பிள்ளைப் பெருமான் உணவால் பராமரிக்கப் படவேண்டிய நிலையை வெறுத்தார்:

அறிவிலாச் சிறிய பருவத்திற் றனே
அருந்தலில் எனக்குள் வெறுப்பைப்
பிறிவிலா தென்னுட் கலந்தநீ அறிதி
இன்றுநான் பேசுவ தென்னே
செறிவிலாக் கடையேன் என்னினும் அடியேன்
திருவருள் அமுதமே விழைந்தேன்
எறிவிலாச் சுவையே றெவற்றினும் விழைவோர்
எட்டுணை யேனும் இன் றெந்தாய்

உண்ணாவிடில் தாய்க்கு ஏற்படக் கூடிய வாட்டத்திற்கு அஞ்சி, நண்பர்களின் அன்பான வற்புறுத்தல்களை மீற அஞ்சி, அவர் அவ்வப்போது உண்டு வேதனைப் படுவார்:

உற்றதா ரணியில் எனக்குல குணர்ச்சி
உற்ற நான் முதல் ஒரு சிலநாள்
பெற்றதாய் வாட்டம் பார்ப்பதற் கஞ்சிப்
பேருண வுண்டனன் சிலநாள்
உற்றவர் நேயர் அன்புளார் வாட்டம்
உறுவதற் கஞ்சினேன் உண்டேன்
மற்றிவை அல்லால் சுகஉணுக் கொள்ள
மனநடுங் கியதுநீ அறிவாய்.

இன்புறும் உணவு கொண்டபோ தெல்லாம்
இச்சுகத் தால் இனி யாது
துன்புறுங் கொல்லோ என்றுளம் நடுங்கிச்
சூழ்வெறு வயிற்றோடும் இருந்தேன்
அன்பிலே அன்பர் கொடுத்தவை எல்லாம்
ஐயகோ தெய்வமே இவற்றால்
வன்புறச் செய்யேல் என்றுளம் பயந்து
வாங்கியுண் டிருந்தனன் எந்தாய்.

கிளைத்தஇவ் வுடம்பில் ஆசைஎள் அளவும்
கிளைத்திலேன் பசிஅற உணவு
திளைத்திடுந் தோறும் வெறுப்போடும் உண்டேன்
இன்றுமே வெறுப்பில்உண் கின்றேன்
தளைத்திடு முடைஊன் உடம்பொரு சிறிதும்
தடித்திட நினைத்திலேன் இன்றும்
இளைத்திட விழைகின் றேன்இது நான்தான்
இயம்பல் என் நீஅறிந் ததுவே.

சிறு பருவத்திலேயே பொருளாசையையும் கடந்து விட்டார். தம் பிரசங்கங்களால் வலிய வந்த பணத்தைக் கிணற்றிலோ, குளத்திலோ, கேணியிலோ, சில சமயம் கொடுத்தவர் மேலேயோ எறிந்து விடுவார்:

செறிவதில் மனத்தேன் காசிலே ஆசை
செய்திலேன் இந்த நாள் அன்றி
அறிவதில் லாத சிறுபரு வத்தும்
அடுத்தவர் கொடுத்தகா சவர்மேல்
எறிவதும் மேட்டில் எறிந்ததும் எனக்குள்

இருக்கின்ற நீஅறிந் ததுவே
பிரிவதில் லாநின் அருட்பெரும் பொருளைப்
பெற்றனன் பேசுவ தென்னே.

பணத்திலே சிறிதும் ஆசைஒன் றிலைநான்
படைத்தஅப் பணங்களைப் பலகால்
கிணற்றிலே எறிந்தேன் குளத்திலும் எறிந்தேன்
கேணியில் எறிந்தனன் எந்தாய்
குணத்திலே நீதான் கொடுக்கின்ற பொருளை
எறிகலேன் கொடுக்கின்றேன் பிறர்க்கே
கணத்திலே எல்லாம் காட்டும்நின் அருளைக்
கண்டனன் இனிச்சொல்வ தென்னே.

அவருடைய பற்றின்மையை உணர்ந்த அன்பர்கள் அவரிடம் பணத்தைக் கொடுக்க அஞ்சி, அவருடைய தமையனாரிடம் கொடுக்கலானார்கள்.

இவ்விதம் அனைத்து ஆசைகளையும் சின்னஞ்சிறு வயதிலேயே வென்ற அடிகள், சாதி சமய ஆசாரங்களின் அவலங்களையும் அவ்விளம் வயதிலேயே உணர்ந்து விட்டார். இதை அவர், பிற்காலத்தில் செய்த சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெருவிண்ணப்பத்தில் கூறுகிறார்:

அச்சிறு பருவத்திற்றானே ஜாதி ஆசாரம் ஆசிரம ஆசாரம் என்னும் பொய்யுலகாசாரத்தைப் பொய்யென்றறிவித்து அவைகளை யநுட்டியாமற் றடை செய்வித்து அப் பருவம் ஏறுந்தோறும் ஏறுந்தோறும் எனதறிவை விளக்கஞ் செய்து செய்து என்னை மேனிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்க வைத்தருளினீர்.

# அத்தியாயம் 6

# அமுதப் பாடல்களும் அற்புதச் செயல்களும்

ராமலிங்கர், ஞானவாழ்வைத் தொடங்கிய தம் பன்னிரண்டாம் வயதிலிருந்து, தினந்தோறும் திருவொற்றியூர் சென்று, அத்தல இறைவனை தியாகராசப் பெருமானையும், இறைவி வடிவுடைய அம்மையையும், ஒற்றி முருகரையும் வழிபடலானார். ஒற்றியூர் தொன்மையான தலம். ஆறு-ஏழு நூற்றாண்டுகளில் வாழ்ந்த சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரின் பதிகங்கள் பெற்றது.

ஒற்றியூர், ராமலிங்கருக்குப் பெரிதும் இசைந்த இடமாய் அமைந்து விட்டது. அவர் தம் பன்னிரண்டாம் வயதிலிருந்து சென்னையில் தாம் உறைந்த முப்பத்தி ஐந்தாம் வயது வரை, நாள் தோறும், சென்னைக்குச் சுமார் பத்து கிலோமீட்டர் தூரத்திலிருந்த இந்த தலத்திற்கு நடந்து சென்று, நந்தியோடைக் கரையில் உலாவுவார். நந்தியாசிரமத்தில் தியானம் செய்வார். இங்கு எழுந்தருளியிருந்த தியாகப் பெருமான் சந்நிதியில் திருவாசகம், தேவாரம் பாடல்களைப் பாடி உருகுவார். பெருமானைப் பற்றித் தாமே அகத்துறையில் பல பாடல்களும் பதிகங்களும் பாடினார். பல நாட்கள் களைப்புற்று, பசியுற்று, இரவில் கோவில் மண்டபத்திலேயே உறங்கி விடுவார்.

திருவொற்றியூர் பெருமானை வழிபடுங் காலத்தில் அடிகள் பல முறை திருத்தணிகை சென்று, பல பதிகங்கள் பாடி முருகனைத் துதித்தார். திருவலிதாயம், திருமுல்லைவாயில் ஆகிய தலங்களுக்கும் சென்று வழிபட்டார். திருமால் தலங்களான திருவள்ளூரிலும் திருக்கண்ணமங்கையிலும் வழிபட்டு, வீரராகவப் பெருமாள் மீதும், கண்ண மங்கைத்தாயார் மீதும் துதிப்பாடல்கள் பாடினார்.

ராமலிங்கர் வழிபட்ட காலத்தில் திருவொற்றியூர் நந்தவனங்கள் சூழ்ந்திருந்தது. எழில் கொண்டு இனிய காட்சி அளித்தது. அதற்குச் சிறப்பளித்த நந்தியோடை இன்று மறைந்து விட்டது. அடிகள் பாடிய நந்தியாசிரமும் சீரழிந்து விட்டது. ஆனால் அடிகள் அங்கு மரநிழலில் அமர்ந்து, ஓடையின் ஓட்டத்தைப் பார்த்தவாறு, பூங்காற்றை நுகர்ந்து, இறைவன் அருளை நினைந்து உருகிய காட்சி இன்றும் அவருடைய அமரப் பாடலில் நிலைத்து நிற்கிறது:

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த

குளிர்தருவே தருநிழலே நிழல் கனிந்த கனியே

ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே

உகந்த தண்ணீர் இடைமலர்ந்த சுகந்தமண மலரே

மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே

மென் காற்றில் விளைசுகமே சுகத்தில்ஊறும் பயனே

ஆடையிலே எனை மணந்த மணவாளா பொதுவில்

ஆடுகின்ற அரசேஎன் அலங்கல்அணிந் தருளே.

இப்பாடலின் வளமும் நயமும் நம்மைக் கொள்ளை கொள்கின்றன. ஐந்து இந்திரியங்களின் குணங்களும் இதில் பரவி இருக்கின்றன. இந்த ஐந்து நோக்குகளுடன் இறைவன் காணப்படுகின்றான். பிறகு அவன் நெஞ்சில் காதலுறும் மணவாளனாகி விடுகிறான். இந்தப் பாடல், இதற்குக் கீழ்த் தளமான, இந்திரிய சுகங்களின் அளவில் மட்டும் ரசனை காட்டும், "வாழ்வின் தீஞ்சுவைகள்" என்னும் ராபர்ட் பிரௌனிங்கின் கவிதையை நினைவு படுத்துகிறது.

திருவொற்றியூர் வாழ்வுக்கு முப்பது ஆண்டுகளுக்குப் பின் அடிகள் சித்திவளாகத்தில் அருட்பெருஞ்ஜோதி அகவலை

இயற்றிய போதும், திருவொற்றியூர் ஆசிரமத்தையும் ஓடையையும் நினைத்து எழுதுகிறார் என்பது அவருடைய சொற்களிலிருந்து தெரிகிறது:

கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே
களைப்பறக் கிடைத்த கருணைநன் னீரே
இளைப்புற வாய்த்த இன்சுவை யுணவே
தென்னைவாய் கிடைத்த செவ்விள நீரே
தென்னைவான் பலத்தின் திருகுதீம் பாலே.

திருவொற்றியூரில் அடிகள் இறைவனின் அருளுக்குப் பாத்திரமாய் வாழ்ந்தார் என்றும், அதை அவர் உணர்ந்திருந்தார் என்றும் அவருடைய பாடல்களிலிருந்து தெரிகிறது.

ஒரு நாள் அவர் ஒற்றியூரிலிருந்து சென்னையில் தமையனார் வீட்டிற்கு வந்து சேர இருட்டி வெகு நேரமாகி விட்டது. தூங்கிக் கொண்டிருந்த அண்ணன் அண்ணியரை அவர் எழுப்ப விரும்பாமல், வெளித் திண்ணையிலேயே படுத்தார்; நடைக் களைப்பிலும் பசிக் களைப்பிலும் அயர்ந்து விட்டார். சிறிது நேரத்தில் எழுப்பப் பட்டதாய் உணர்ந்து எழுந்தார். பக்கத்தில் நின்று கொண்டிருந்த அண்ணியார் தம் கையில் இருந்த வட்டிலை அவரிடம் கொடுக்க, அவர் அதைப் பெற்றுக் கொண்டு, உணவை உண்டு, படுத்துறங்கி விட்டார். சிறிது நேரத்தில் அவர் மீண்டும் எழுப்பப் பட்டார். விழித்தவரை அண்ணி உள்ளே வந்து உணவு கொள்ளுமாறு அழைத்தார். தொடர்ந்தெழுந்த பேச்சில், அடிகளை முதன் முறை எழுப்பியது அண்ணி அல்ல என்று தெளிவாயிற்று. அண்ணியார் வடிவில் அடிகளுக்கு உணவு வழங்கியது வடிவுடைய அம்மை என்று அறிந்தனர். இதை விளக்கிக் காட்டுவது போல், அதே சமயம் வடிவுடையம்மை, அண்ணியார் வடிவில், கையில் வட்டிலுடன் அவர்களுக்குக்

காட்சி யளித்து மறைந்தனர். இதை நினைத்து அடிகள் அம்மையைப் போற்றுகிறார்:

தெற்றியிலே நான்பசித்துப் படுத்திளைத்த தருணம்
திரு அமுதோர் திருக்கரத்தே திகழ்வள்ளத் தெடுத்தே
ஒற்றியிற்போய்ப் பசித்தினையோ என்றெனையங் கெழுப்பி
உவந்து கொடுத் தருளியஎன் உயிர்க்கினிதாந் தாயே
பற்றியஎன் பற்றனைத்தும் தன்அடிப்பற் றாகப்
பரிந்தருளி எனை ஈன்ற பண்புடைஎந் தாயே
பெற்றியுளார் சுற்றிநின்று போற்றமணிப் பொதுவில்
பெருநடஞ்செய் அரசேஎன் பிதற்றும்உவந் தருளே.

மற்றொரு நாள் அடிகளுக்கு ஒற்றியூர் இறைவனே உணவளித்ததாகச் சாற்றுகின்றனர். ஓர் இரவில் அடிகள் கோவில் மண்டபத்தில் பசியோடு படுத்து உறங்கிவிட, கோயில் பூசகர் அவரை எழுப்பி அன்னமளித்துச் சென்றார். அந்தப் பூசகர் இரண்டு நாட்களாக ஊரில் இல்லை என்று பிறகு தெரிய வந்தது.

ராமலிங்கர் சித்துக்களையும் அற்புதங்களையும் மதிக்கவில்லை. இவற்றை நாடினால், மனம் மேல்நிலை ஏறுவதற்குக் குந்தகமாய்ப் போய்விடும் என்று கருதினார். சில மெய்யன்பர்களுக்கு மாத்திரம் சில சமயம் அற்புதங்கள் செய்து அருளினார். என்றாலும் அவர் செய்த அற்புதங்கள் பல அன்பர்களால் தொகுக்கப் பட்டிருக்கின்றன.

அவர் ஒற்றியூர்க் கடற்கரையிலிருந்த கோவிலில் வழிபட்ட பிறகு அங்குள்ள குளக்கரையில் இளைப்பாற்றிக் கொள்வது வழக்கம். ஒருநாள் அவர் அவ்வாறு அமர்ந்திருக்கையில்,

கோவிலில் பணிபுரிந்து வந்த முதுமையான ஓர் அம்மை அவரை வணங்கி, தமக்கு ஓர் அற்புதம் நிகழ்த்திக் காட்டுமாறு வேண்டிக் கொண்டார். அடிகள் கடற்கரை மணலில் ஒரு பிடி அள்ளி எடுத்து, அவ்வம்மையார் கையில் கொடுத்து, கையை மூடித்திறக்கச் சொன்னார். அம்மையார் அப்படியே செய்ய, அவருடைய கையில் இருந்த மணற்பொடிகள் அனைத்தும் சிவலிங்கங்களாய் மாறியிருந்தன. இத் தலத்தில் பட்டினத்துஅடிகள் சிவலிங்கத்திற்குள் மறைந்ததாகப் புராணம் கூறுவது நோக்கத் தகுந்தது.

இங்ஙனம் அடிகளிடம் உறைந்த அருளொளியும், அவருடைய தூய்மையும் அடக்கமும், பேச்சுவளமும் பார்ப்போர், கேட்போர் அனைவரையும் வசப்படுத்தின. அவரைச் சுற்றி மக்கள் திரண்டு கூடினர். அவர்களில் முக்கியமாய்க் குறிப்பிடத் தக்கவர் தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்கள். அவர் பண்பிலும் படிப்பிலும் சிறந்தவர்; உபயகலாநிதிப் புலவர் எனப் பிறகு பெயர் எடுத்தார். அவர் 1849–ம் ஆண்டில் அடிகளின் மாணவரானார். அப்பொழுது அவருக்கு வயது பதினேழு. அடிகளுக்கு இருபத்தி ஆறு. வேலாயுத முதலியார் அடிகளின் பாடல்களை முதலில் பிரசுரத்திற்குத் தொகுத்தவர். அடிகளின் மறைவுக்குப் பின் அவர் சென்னை மாகாணக் கல்லூரியில் தமிழாசிரியரானார்.

# அத்தியாயம் 7

## திருமணம்

அடிகள், புத்தர் (கி.மு. 568–488), ராமகிருஷ்ணர் (கி.பி. 1836–1886), ரமணமகரிஷி (கி.பி. 1879–1950) முதலிய சான்ருேர்களைப் போல் ஜீவன்முக்தர். பிள்ளைப் பிராயத்திலேயே முற்றும் துறந்தவர். அவர் மண வாழ்க்கையை விரும்பவில்லை. அவர் இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிருர்:

இன்றுமிங் கெனைநீ மடந்தையர் முயக்கில்
  எய்துவித் திடுதியேல் அதுவுன்
தன்னுளப் புணர்ப்பிங் கெனக் கொரு சிறிதும்
  சம்மதம் அன்று நான் இதனைப்
பன்னுவ தென்னே இதில்அரு வருப்புப்
  பால்உணும் காலையே உளதால்
மன்னும்அம் பலத்தே நடம்புரி வோய்என்
  மதிப்பெல்லாம் திருவடி மலர்க்கே.

ஆயினும் அவரை உற்ருர் உறவினர்கள் மணத்திற்கு இசைவிக்க முயன்றனர். கிரஹஸ்தாசிரமத்தின் தேவை, சமூகத்தின் சேவை எனப் பலவாறு தாமாகவும், துறவி ஒருவரைக் கொண்டும் உபதேசித்தனர். அடிகள் கடைசியில் ஒப்புக் கொண்டார். திருமணம் 1850–ல் நிகழ்ந்தது. அவருக்கு அப்பொழுது இருபத்தியேழு வயது. காலம் கடந்த விவாகம். அவர்கள் அவருக்கு மணம் செய்வித்தது அவருடைய தமக்கை உண்ணுமலை அம்மையின் பெண் தனம்மாள்.

திருமணம் முறையே நடைபெற்றது. பிறரின் வற்புறுத்தல்களுக்கு அடிகள் எங்ஙனம் சம்மதித்தார் என்பது விசித்திரமே. பெற்றதாய் வாட்டம் பார்ப்பதற்கு அஞ்சுவதாகவும், உற்றவர் நேயர் அன்புளார் வாட்டம் உறுவதறக்கு அஞ்சுவதாவும் தம்மைப் பற்றிக் கூறிக் கொண்ட அடிகள் மணவிஷயத்திலும், பிறவிஷயங்களிலே போல், அஞ்சி ஒப்புக் கொண்டு விட்டாரோ? முறைப்படி மணமகளுக்குத் தாலி கட்டினாரே யொழிய, அந்தச் சடங்கு செயலைத் தாண்டவில்லை. சாந்தி முகூர்த்த இரவில் அறையுள், கையில் தம் வழிபாடு நூலான திருவாசகத்துடன் சென்றார். இரவெல்லாம் அதையே ஓதிக் கழித்தார். தொடர்ந்த இரவுகளிலும் அவ்வாசகத்தை ஓதுவதிலும் கேட்பதிலுமே நிலைத்திருந்தார். 'பிள்ளை பெரு விண்ணப்ப'த்தில் அடிகள் இந்த வினையைத் தம் தீஞ்சொற்களில் நொந்து கொள்கிறார்:

முனித்தவெவ் வினையோ நின்னருட் செயலோ
தெரிந்திலேன் மோகமே லின்றித்
தனித்தனி ஒருசார் மடந்தையர் தமக்குள்
ஒருத்தியைக் கைதொடச் சார்ந்தேன்
குனித்தமற் றவரைத் தொட்டனன் அன்றிக்
கலப்பிலேன் மற்றிதுயது குறித்தே
பனித்தனன் நினைத்த தோறும்உள் உடைந்தேன்,
பகர்வதென் எந்தைநீ அறிவாய்.

இங்ஙனம் திருவாசகத்து வாழ்க்கைப் பட்டவர், திருவாசகக் குரவரான மாணிக்கவாசகருக்குத் தம் காணிக்கையைச் செலுத்துகிறார்:

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே

தேன் கலந்து பால் கலந்து செழுங்கனித் தீஞ்சுவை
கலந்தென்

ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல்
இனிப்பதுவே.

மேலும் திருவாசகத்தின் ஒருவாசகம் தம்மை இறைவனுடன் ஒன்று சேர்க்க வல்லது என்கிறார்:

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில்

ஒரு மொழியே என்னையும்என் உடையனையும்
ஒன்று வித்துத்

தருமொழியாம் என்னில்இனிச் சாதகமேன்
சஞ்சலமேன்

குருமொழியை விரும்பிஅயல் கூடுவதேன் கூறுதியே.

விவாகத்தினால் ராமலிங்கருடன் வாழ்வில் ஒன்றுவிக்கப்பட்ட தனம்மாள் இதற்குப் பிறகு எங்குற்றார், அவருடைய கதி என்னவாயிற்று, என்பதற்குச் சான்று ஒன்றுமில்லை.

# அத்தியாயம் 8

# பதிப்பாசிரியர், கல்வெட்டறிஞர், அருட்கவி

சென்னையில் வசித்து வந்தபோது அடிகள் நாள் தோறும் திருவொற்றியூருக்கும், இடையிடையே அடுத்துள்ள பிற தலங்களுக்கும் சென்று வழிபட்டு வந்தார். 1854–ம் ஆண்டில், சிறிது காலம், மயிலையில் தங்கினர் என்பதற்குச் சான்று இருக்கிறது. தம்மை நாடி வந்தவர்களுக்கு இலக்கண, ஞான நூல்களைப் போதிப்பதும், சிறுவர்களுக்குக் கல்வி பயிற்றுவதும் நூல்கள் பதிப்பிப்பதுமாய் இருந்தார். இச்சேவைகளுக்கு நடுவே அவருடைய பாடல்கள் ஊற்றுப் போல் பெருக்கெடுத்து ஓடின.

சென்னையில் அவருடைய முதற் பன்னிரண்டு ஆண்டுகளை (அதாவது 1835-ஆம் ஆண்டு வரை) அவர் வரலாற்றின் கந்தகோட்டப் பகுதி என்றும், அடுத்த இருபத்தி மூன்று ஆண்டுகளை (அதாவது 1858 வரை) திருவொற்றியூர்ப் பகுதியென்றும், திரு ஊரன் அடிகள் நேர்த்தியாய்ப் பிரித்திருக்கிறார். முதற் பகுதியில் கந்தகோட்டத்து முருகனுக்கும் திருத்தணிகை வேலனுக்கும் பாமாலைகள் சூட்டினார். இரண்டாம் பகுதியில், ஒற்றியூர் தியாகராசப் பெருமானுக்கும் தணிகை வேலனுக்கும் பாமாலைகள் சூட்டினார். மேலும் அவர் அனைத்து வித்துவான்களும் வணங்கும் சீரிய வித்துவானாய் விளங்கினார். சித்தர், ஞானி, அருளாளர் என்று அவரை மக்கள் போற்றினர். மடாதிபதிகள், ஆதீன சுவாமிகள், வடமொழிப் புலவர்கள், தென்மொழிப் புலவர்கள், தனவந்தர்கள், ஏழைகள், அரசாங்க அதிகாரிகள், சீடர்கள் என பலரும் அவரைச் சூழ்ந்தனர். எனினும் அவர் புகழ்ச்சிக்கும் ஆடம்பரத்துக்கும் ஆட்படாமல் இருந்தார்.

இந்தக் காலத்தில் அவர் மூன்று பழைய நூல்களைப் பதிப்பித்தார். இரு உரை நூல்கள் எழுதினார்.

இவற்றில் முதலாவதாக வெளிவந்தது 'ஒழுவிலொடுக்கம்'. இதை அருளிய ஆசிரியர் சீர்காழிக் கண்ணுடைய வள்ளலார். இவர் வாழ்ந்த காலம் கி.பி. 1380 முதல் கி.பி. 1476 வரை. இந்நூலுக்கு திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் உரை செய்திருந்தனர். இதை முதலில் பதிப்பித்து, தமிழகத்துக்கு ஈந்தவர் ராமலிங்க அடிகள். இப்பதிப்பு 1851-ம் ஆண்டில் சபாபதி முதலியார் அவர்களால் அச்சேற்றிப் பிரசுரிக்கப் பட்டது. இது ஐக்கிய வாத சைவ நூல் என்று சிலரும், சித்தாந்த சைவ நூல் என்று சிலரும் சாற்றுவர்.

இதற்கடுத்து வெளிவந்த நூல், உரைநடை அரிதான அக்காலத்திலே அடிகள் எழுதிய 'மனுமுறை கண்ட வாசகம்' என்ற உரைநடை நூல். இது 1854-ம் ஆண்டில் 'சாஸ்திர விளக்கச் சங்க'த்தார் கேட்டுக்கொண்டபடி, அடிகளால் மனுநீதி கண்ட புராணத்தையொட்டி இயற்றப்பட்டு, பாளையம் சுப்புராய செட்டியவர்களால், மேற்கூறிய சங்கத்தின் வித்தியானந்த அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப் பட்டது. இந்நூல் மனுச்சோழனின் மகன், விதிவீடங்கனின் தேர்க்காலில் கன்று அடிபட்டுத் தாய்ப் பசு வருந்த, அதற்குச் சோழன் நீதி வழங்கியதை விவரிக்கிறது.

இதையடுத்து பிரசுரிக்கப்பட்டது 'தொண்ட மண்டல சதகம்' எனும் நூலின் பதிப்பு. இது 17-ம் நூற்றாண்டில் இருந்த படிக்காசுப் புலவரால் இயற்றப்பட்ட சதகப் பிரபந்தம், அதாவது நூறு பாடல்கள் கொண்ட நூல். இது தொண்ட மண்டலத்தின் சிறப்பைக் கூறுகிறது.

தொண்ட மண்டலம் என்பது செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்களும் தென் ஆற்காடு மாவட்டத்தின் ஒரு பகுதியும் சேர்ந்த ஓர் அரசுக்குப் பண்டைக் காலத்தில் வழங்கப்பட்ட பெயர். ராமலிங்கர் காலத்தில் சென்னையில் வித்துவான்கள், ஆசிரியர்கள், புலவர்கள், பிரபுக்கள் ஆகியோரிடையே, 'தொண்டை மண்டலமா, தொண்ட மண்டலமா?' என்று இப்பெயரைப் பற்றிய வாதம் எழுந்திருந்தது. அவர்கள்

அடிகளை அண்டி, இரண்டில் எது சரியானது என்று கேட்டுக் கொள்ள, அடிகள் 'தொண்ட மண்டலம் என்பதே சரி என்றனர்'. தம் கூற்றை 'நூற்பெயர் இலக்கணம்' என்று எழுதி, புத்தகத்தில் சதகத்துடன் சேர்த்து வெளியிட்டார். சர்ச்சையை அலசி, 'டகர'த்தை 'டகர ஐ கார' மாக மாறுபடக் கூறுவோரின் வாதங்களை விவரமாக ஒன்றன் பின் ஒன்றாகக் கூறி, இவ்வாதங்களின் மறுப்புக்களையும் கொடுத்து, ஐயத்திற் கிடமின்றி பிரச்னையைத் தீர்த்தார். ஒரு நுண்ணிய விஷயத்தில் அவர் காட்டுகின்ற புலமையும், திறனும் அறிவும் நம்மைத் திகைக்க வைக்கின்றன. அந்த அரசை ஆண்டவனின் பெயர் 'ஆதொண்டன்' எனக் காட்டி, 'ஆபூதன் மங்கலம்' என்பது 'பூத மங்கலம்' எனும் பெயராக மாறுவது போல், ஏராளமான மேற்கோள்கள் காட்டிவிட்டு, இறுதியில், நூற்பெயரிலக்கணத்தில், பின் வருமாறு கூறுகிறார்:

> இங்ஙன முணரமாட்டாதார் ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்பவர் தாமரசு செய்யுங் காலத்தில் தம்மாற் கட்டுவித்த ஆலயங்களிற் றம் பெயரிலச்சனை சிலையின் கட் பொறிப் பித்தனர்; ஆண்டும் ஆதொண்ட வென்றே இலக்கணவமைதி பெற்றிருக் கின்றது இதனை திருவலியதாயம் திருமுல்லைவாயில் முதலிய சிவதலங்களிற் சென்றேனுங் கண்டு தெளியக் கடவர்.

இங்ஙனம் கடைசியில் கல்வெட்டுச் சான்றுகள் காட்டும் அறிவின் பரப்பை என்னென்று சொல்லுவது! சாசன ஆராய்ச்சி, தொல் பொருளாராய்ச்சி இல்லாத காலத்தில்–எவரும் கல்வெட்டுக்களில் கவனம் காட்டாத காலத்தில், அடிகள் முதல் கல் வெட்டறிஞராய் இருந்தார்.

இந்த நூல் அச்சிடப்பட வேண்டும் என்று தொண்ட மண்டலம் துளுவ வேளாளர் இயற்றமிழ்ப் போதக சாலைத்தலைவர் கொண்ணூர் ஐயாசாமி முதலியார் அடிகளை வேண்டி, 1855–ம் ஆண்டில் பிரசுரித்தார். இது இலவச வெளியீடாய்க் கொண்டுவரப் பட்டது.

ராமலிங்கர் பதிப்பித்த மூன்றும் நூல் 'சின்மய தீபிகை' என்னும் ஞான நூல். இதன் ஆசிரியர் விருத்தாசலம் குமார தேவ சுவாமிகள் ஆதீனம் முத்தைய சுவாமிகள். இப்பதிப்பு மண்ணிப்பாக்கம் சபாபதி முதலியார், பாக்குப்பேட்டை மதுரை முதலியார் ஆகிய இருவராலும் 1857-ல் பிரசுரிக்கப்பட்டது.

அடிகளின் இரண்டாம் உரைநடை நூல் 'சீவகாருணிய ஒழுக்கம்.' அவர் சித்தி யடைந்த பின்னரே அது பிரசுரிக்கப்பட்டது.

வள்ளலார் தமது பாடல்கள் அச்சாவதில் கவனமோ நோக்கமோ கொள்ளவில்லை. அவருடைய பதிகங்களையும் பிரபந்தங்களையும் சிலர் பல பிழைகளுடன் தனித்தனிப் புத்தகங்களாய்க் கொண்டு வந்ததையும் அவர் பொருட்படுத்தவில்லை. பல ஆண்டுகளுக்குப் பிறகு, அவர் வடலூருக்குச் சென்ற பின்னர்தான் அவருடைய சீடர்கள் சிலர் அவரை வற்புறுத்தி அநுமதி பெற்று, ஏடுகளைச் சேகரித்துத் தொகுத்து, முறையாக அச்சிட்டு வெளியிட்டனர். அப்புத்தகத்திற்கு 'திரு அருட்பா' எனப் பெயர் சூட்டினர். அதிலும் பல பதிகங்கள் விட்டுப் போயின.

# அத்தியாயம் 9

## சிதம்பர யாத்திரை

சென்னையில் உறைந்த காலத்திலும் ராமலிங்கர் அநேகமாய் நகரில் தங்காமலேயே இருந்தார். இரவும் பகலும் நகரை விட்டு நீங்கி, அடுத்துள்ள இடங்களுக்குப் போய் விடுவார். பிற்காலத்தில் பாடிய பாடல் ஒன்றில் இது பற்றிக் கூறுகிறார்:

தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால்
சிலுகுறும் என்றுளம் பயந்தே
நாட்டிலே சிறிய ஊர்ப்புறங் களிலே
நண்ணினேன் ஊர்ப்புறம் அடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க்
களத்திலே திரிந்துற்ற இளைப்பை
ஏட்டிலே எழுத முடியுமோ இவைகள்
எந்தைநீ அறிந்தது தானே.

சகப்புற வாழ்வைப் பார்த்திடில் கேட்கில்
சஞ்சலம் உறும்எனப் பயந்தே
நகர்ப்புறத் திருக்குந் தோட்டங்கள் தோறும்
நண்ணியும் பிறவிடத் தலைந்தும்
பகற்பொழு தெல்லாம் நாடொருங் கழித்தேன்
பகலன்றி இரவும்அப் படியே
மிகப்பல விடத்தும் திரிந்தனன் அடியேன்
விளம்பலென் நீஅறிந் ததுவே.

இங்ஙனம் சென்னை வாழ்வு ஞான வாழ்வுக்கு ஒவ்வாது என்ற முடிவுக்குவந்து, சென்னையில் முதல் அகவையைத்தவிர முப்பத்தி நான்கு ஆண்டுகள் உறைந்த பிறகு, 1858—ம் ஆண்டில் அடிகள் சென்னையை நீத்து விட்டார். குழவிப் பருவத்திலே தம் கண்களில் தோன்றி, தம் மனத்திலே நிலைத்து விட்ட சிதம்பரத் தலத்தைக் குறிகொண்டு சென்றூர். மருதூரில் பிறந்து, சென்னையிலும் கருங்குழியிலும், வடலூரிலும் மேட்டுக் குப்பத்திலும் அவர் உறைந்திருந்த போதிலும், அவருடைய அகக் கண் முன் சிதம்பரமே தன் ரகசியத்தை விரித்து அவரை ஆட்கொண்டு விட்டது. தம் பெயரையே அடிகள் இறுதிவரை 'சிதம்பரம் இராமலிங்கம்' என்று வழங்கிக் கொண்டனர், அவ்வாறே கையொப்பத்தையும் இட்டனர்.

சென்னையை நீத்த அடிகள், அன்பர்கள் சிலருடன் கால் நடையாக யாத்திரை சென்றூர். அன்பர்களின் விருப்பத்திற்கு இணங்கி, வழியில் ஆங்காங்கு சில நாட்கள் தங்கினூர். தங்கிய இடங்களில், அத்தல தெய்வங்களை வழிபட்டார். புதுவையில் தங்கினூர். திருவாரூரில் இறைவனுக்குப் பாடல் சூட்டினூர். தம் ஞானகுரு திருஞான சம்பந்தரின் திருப்பதியான சீர்காழிக்குச் சென்றூர். அங்கு அம்மன் கோயிற் பந்தலில் பிரசங்கம் செய்தார். பின்னர், வைத்தீஸ்வரன் கோவிலில் தொழுது, ஈஸ்வரனுக்குப் பதிகங்களும் பாடல்களும் கீர்த்தனைகளும் சூட்டினூர். கடைசியில், தம் பிறவித் தலமாகிய மருதூரின் அருகிலுள்ள கருங்குழியை அடைந்தார். அடைந்த சில நாட்களில், அங்கு வசித்து வந்த அவருடைய சிறிய தமையனூர் பரசுராம பிள்ளை மரணமடைந்து விட்டார். பிறகு அவ்வூரை விட்டு அடிகள் புறப்பட்ட பொழுது, அங்கு மணியக்காரராய் இருந்த வேங்கட ரெட்டியார் அவரைத் தம் இல்லத்திலேயே இருந்தருள வேண்டும் என்று வற்புறுத்தினூர். அடிகளும் அதற்கிணங்கி, அவருடைய இல்லத்திலேயே தங்கினூர். இவ்வாறு ஒன்பது ஆண்டுகள் (1858–லிருந்து வடலூருக்குச் சென்ற 1867–ம் ஆண்டு வரை) அடிகள் ரெட்டியாரின் இல்லத்திலேயே இருந்தார். ரெட்டியாரும் அவருடைய மனைவியார் முத்தியாலு அம்மாளும் தங்கள்

பாக்கியத்தை உணர்ந்து, அடிகளுக்குப் பணி புரிந்தனர். ஒரு தனி அறை அவருக்கென்று ஒதுக்கப்பட்டது.

சென்னையில் தினம் திருவொற்றியூரில் வழிபட்டது போல், அடிகள் இங்கு அடிக்கடி சிதம்பரம் சென்று வழிபடலானார். எவ்வளவு தொன்மையான தலம்! 7–ம் நூற்றாண்டிலே வாழ்ந்த மாணிக்க வாசகப் பெருமான் தில்லையை

"தில்லை மூதூர் ஆடிய திருவடி"

என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து அதன் தொன்மை புலனாகும். தமிழ் நாட்டிலுள்ள ஐம்பூத (மண், நீர், தீ, வளி, வான்) தலங்களில் இது வான் அல்லது ஆகாயத் தலம். பூதங்களில் நுண்மையானது ஆகாசம். ஆகாசலிங்கம் சிதம்பர ரகசியமாகிறது; அருவ வழிபாட்டிற்கு வழி காட்டுகிறது.

வள்ளலாரின் ஆத்ம யாத்திரையில் ஒரு விசேஷத்தைக் காண்கிறோம்:

அடிகள் ஐந்தாறு மாத வயதிலேயே சிதம்பர ரகசியம் கண்டு, இறைவனால் ஆட் கொள்ளப்பட்டார். ஒன்பதாம் அகவையில் நிலைக் கண்ணாடியில் தரிசனம் தந்த உருவ இறைவன் தணிகை முருகனின் அடியானார். அப்பொழுதும் பிறகும் கந்த கோட்ட முருகனின் அருளில் நீந்தினார். பின்னர், மீண்டும் நடராஜப் பெருமானிடம் நாட்டம் கொண்டார். இறுதியில் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் சித்தரானார். இது ஒரு வழி பாட்டுக் கதம்பமாய் இருக்கிறதே, இதில் உண்மை எப்படி உறையக் கூடும் என்று சிலர் — பிற மதத்தினர் — கேட்கலாம். ஆனால் கடவுள் ஒன்று என்பதோடு அல்லாமல், அவர் உருவமாகவும் அருவமாகவும் இருப்பவர் என்பது நம்மவர் கொள்கை. "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்," என்று சாற்றுகின்றனர் நம் சித்தர்கள். கிருஷ்ண பரமாத்மாவும் கீதையில் (VII, 21—ல்), 'எந்த வடிவத்தைத் தெய்வமென ஒரு பக்தன் சிரத்தையுடன் அர்ச்சிக்கிறானோ, அந்த வடிவில் நான் அவனுடைய சிரத்தையைப் பலனுள்ளதாகச் செய்கிறேன்,' என்கிறார்.

கருங்குழி நாட்களில் அடிகள் சிதம்பரத்திற்கு வழக்கமாய்ப் போவதுடன், திருமுதுகுன்றம் (விருத்தாசலம்), திருவண்ணுமலை, திருவதிகைத் தலங்களுக்குச் சென்று, பழமலையார், திருவண்ணு மலையார், பெரிய நாயகியார் ஆகியோரைப் போற்றிப் பாடல்கள் புனைந்து வழிபட்டார்.

தில்லையில் அடிகள் அம்பல வாயிலில் ஒதுங்கி நின்று, தமக்கு இளம்பிராயத்தில் இறைவன் அருளிய கருணையை வியந்து உருகுகிறுர்.

அந்நாளில் அடிச்சிறியேன் அம்பலவா யிலிலே
அருளைநினைந் தொருபுறத்தே அயர்ந்தழுந்து நின்றேன்
முந்நாளில் யான்புரிந்த பெருந்தவத்தால் எனக்கு
முகமலர்ந்து மொழிந்த அருண் மொழியை நினைந் தந்தச்
செந்நாளை எதிர்பார்த்தே பன்னுளும் களித்தேன்
சிந்தை மலர்ந் திருந்தேன்அச் செல்வமிகு திருநாள்
இந்நாளே ஆதலினுல் எனக் கருள்வீர் என்றேன்
என்பதன் முன் அளித்தீர்நும் அன்புலகில் பெரிதே.

அம்பல வாயில் நின்ற தாம் இறைவனிடமிருந்து நேரே அருளையும், அதனுல் கிட்டக் கூடிய சித்திகள் அனைத்தையும் பெற்றதாகக் கூறுகிறுர்:

அந்நாளில் அம்பலத் திருவாயில் இடை
உனக் கன்புடன் உரைத்த படியே
அற்புதம்எ லாம்வல்ல நம்அருட் பேரொளி
அளித்தனம் மகிழ்ந்துன் உள்ளே

இந்நாள் தொடுத்துநீ எண்ணிய படிக்கே
இயற்றிவிளை யாடி மகிழ்க
என்றும்இற வாநிலையில் இன்பஅநு பவனாகி
இயல் சுத்தம் ஆதிமூன்றும்
எந்நாளும் உன்இச்சை வழிபெற்று வாழ்கயாம்
எய்திநின் னுட்கலந்தேம்
இனிஎந்த ஆற்றினும் பிரிவுறேம் உண்மைஈ
தெம்மாணை என்றகுருவே
மன்னாகி என்பெரிய வாழ்வாகி அழியாத
வரமாகி நின்ற சிவமே
மணிமன்றின் நடுநின்ற ஒருதெய்வ மேஎலாம்
வல்லநட ராஜபதியே.

சிதம்பர வழிபாட்டிற் கழித்த பன்னிரண்டு ஆண்டுகளில் அடிகள் சிதம்பரப் பொருள் கொண்டு, தோத்திர மாலைகளும் சாத்திர மாலைகளுமாய் இருநூறு பாமாலைகள் பாடியிருக்கிறார். இவற்றிற்கு எடுத்துக் காட்டாய் ஒன்றைக் குறிப்பது இயலாத காரியம். எனினும், இன்றும் பரவலாய் பாடப்பட்டு, பலருக்கும் தெரிந்திருக்கும் என்ற காரணத்தைக் கொண்டு பின் வரும் பாடலைக் காட்டுகிறோம்:

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பளிக்கும்
களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும்
கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரம் அளிக்கும்
வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும்
மதியே

நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
    நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும்
        நலமே
எல்லார்க்கும் பொதுவில் நடம்இடுகின்ற சிவமே
    என் அரசே யான்புகலும் இசையும்அணிந்
        தருளே.

# அத்தியாயம் 10

## சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்

ராமலிங்கரின் உள்ளத்தில் கனிந்த ஞானக் கனியான சமரச சுத்த சன்மார்க்கம் ஒருநெறி, ஆத்ம அனுபூதி. அதைப் பரப்ப ஒரு சங்கத்தை அடிகள் 1865–ம் ஆண்டில் அமைத்தார். இதில் தமக்கிருந்த இச்சையை அவரே தெரிவிக்கிறார்:

தங்கமே அனையார் கூடியஞான
சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்
சார்திருக் கோயில்கண் டிடவும்
துங்கமே பெறுஞ்சற் சங்கம்நீ டூழி
துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
ஆடவும் இச்சைகாண் எந்தாய்.

சங்கத்தை அமைத்த பொழுது அதற்கு 'சமரசவேத சன்மார்க்க சங்கம்' என்ற பெயர் வைத்தார்கள். பிறகு தூய (சுத்த) உண்மையிலேயே மக்களை நிறுத்த வேண்டும், சமய வாசனையை அறவே நீக்கி விட வேண்டும் என்று அடிகள் அப்பெயரை 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்' என்று மாற்றி விட்டார்கள். இக் கருத்து அவர் முதலில் வைத்த சங்கத்தின் பெயருக்கு அவர் தந்த விளக்கத்திலேயே தென்படுகிறது:

> *சமரச வேத சன்மார்க்க சங்கம் என்பதற்குப் பொருள் எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாகிய அறிவுநூல் முடியான நான்காவது மார்க்கத்தை அனுஷ்டிக்கிற கூட்டமென்று கொள்க. மேற்படி மார்க்கம் நான்காவன. தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நான்கு.*

இந்த நான்கு மார்க்கங்களுக்கு சைவ சித்தாந்தம் தரும் பழைய விளக்கம் பின் வருமாறு:

> *தாசமார்க்கம். இறைவனுக்கு அடிமையாதல்.*
>
> *சற்புத்திர மார்க்கம். இறைவனுக்கு மகனாதல்.*
>
> *சகமார்க்கம். இறைவனுக்கு நண்பனாதல்.*
>
> *சன்மார்க்கம். இறைவனே தானாதல்.*

மேற்படி விளக்கம் தெய்வநியாய முறை, சமய சன்மார்க்கமாகும் என்கிறார் ராமலிங்க அடிகள். அதற்கு மேல் அவர் தம் புதிய விளக்கத்தைத் தருகிறார்:

> *தாசமார்க்கம். எல்லா உயிர்களையும் தன் அடிமையாகப் பாவித்தல்.*
>
> *சற்புத்திர மார்க்கம். எல்லா உயிர்களையும் தன் மகனாகப் பாவித்தல்.*
>
> *சகமார்க்கம். எல்லா உயிர்களையும் தன் நண்பனாகப் பாவித்தல்*
>
> *சன்மார்க்கம். எல்லா உயிர்களையும் தன்னைப்போல் பாவித்தல்.*

இந்த ஜீவநியாயம், சமரச சன்மார்க்கமாகும் என்று விளக்குகிறார் அடிகள்.

இங்ஙனம் தெய்வத்தின் இடத்தில் ஜீவன்களை வைத்து அடிகள் ஓர் ஆத்மீகப் புரட்சி செய்கிறார். இந்த சன்மார்க்கத்தின் முதற்பிரிவு ஜீவகாருண்யம் என்று தம்

'ஜீவகாருண்ய ஒழுக்கம்' நூலில் கூறுகிறார். சன்மார்க்கத்தின் இயல்புகளைப் பின் வருமாறு விவரிக்கிறார்:

> இதனியல்பாவன: கொல்லாமை, பொறுமை, சாந்தம், அடக்கம், இந்திரியநிக்கிரகம், ஆன்ம இயற்கைக் குணமாகிய ஜீவகாருண்யம்.

இதில் இரு விஷயங்கள் நோக்கத்தக்கன: இயல்புகளில் முதலாவதாகக் கொல்லாமையைச் சொல்லுகிறார். மேலும் ஜீவகாருண்யத்தை ஆத்மாவின் இயற்கைக் குணம் என்கிறார். இங்ஙனம் அடிகள் மனிதன் பிற ஜீவன்களுடன் அமைத்துக் கொள்ளும் உறவு, அவன் இறைவனிடம் அமைத்துக் கொள்ள வேண்டிய உறவின் நிழலாகும் என்கிறார்.

சைவக் குரவர்களில் திருநாவுக்கரசர் தாசமார்க்கததினர், திருஞான சம்பந்தர் சற்புத்திர மார்க்கத்தினர், சுந்தர மூர்த்திகள் சகமார்க்கத்தினர், மாணிக்க வாசகர் சன்மார்க்கத்தினர் என்று அடிகள் கருதினர். தம்மை இறைவன் படிப்படியாக இந்த மார்க்கங்களில் ஏற்றி, சன்மார்க்கத்தில் உய்ய் வைத்தனன் என்கிறார்கள்:

> அன்றே என்னை யடிய னாக்கி
>
> யாண்ட சோதி யே
>
> அதன்பின் பிள்ளை யாக்கி யருளிங்
>
> களித்த சோதி யே
>
> நன்றே மீட்டு நேய னாக்கி
>
> நயந்த சோதி யே
>
> நானு நீயு மொன்றென் றுரைத்து
>
> நல்கு சோதி யே.

1867–ம் ஆண்டில் சங்கத்தின் இணைப்பான சமரச வேத தருமச்சாலையை அடிகள் நிறுவினார்கள். (பின்னர், 1872–ல்

இதன் பெயரை 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை' என்று மாற்றினர்.) தருமச்சாலையின் தொடக்கவிழாவில் (1867 மே இருபத்தி மூன்றும் தேதியில்) அடிகள் அருளிய 'ஜீவகாருண்ய ஒழுக்கம்' என்ற நூலின் சில பகுதிகளை சிதம்பரம் வேங்கட சுப்பு தீக்ஷிதர் அவர்கள் வாசித்தனர். அந்நூலில் பின் வரும் உபதேசம் அடங்கி யிருக்கிறது:

> உலகத்தில் மனிதப் பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்க ளிந்தப் பிறப்பினு லடையத் தக்க பிரயோசனத்தைக் காலமுள்ளபோதே யறிந்து அடைய வேண்டும்.
>
> அந்தப் பிரயோசனம் யாதோ வெனில்: ... எக் காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் தடைபடாமல் வாழ்கின்ற வொப்பற்ற பெரிய வாழ்வை யடைவதே யிந்த மனிதப் பிறப்பினுல் அடையத் தக்க பிரயோசன மென்றறிய வேண்டும்.
>
> இயற்கை யின்பத்தைப் பெற்றுத் தடைபடாமல் வாழ்கின்ற அந்தப் பெரிய வாழ்வை எதனுல் அடைய வேண்டுமெனில்: கடவுளின் இயற்கை விளக்கமாகிய வருளைக் கொண்டே யடைய வேண்டு மென்றறிய வேண்டும்.
>
> கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருளை எதனுல் பெறக் கூடுமெனில்: ஜீவகாருண்ய வொழுக்கத்திறுற் கடவு ளருளைப் பெறக் கூடு மல்லது வேறெந்த வழியாலும் சிறிதும் பெறக் கூடாதென்று உறுதியாக அறிதல் வேண்டும்.

இந்த நூல் அடிகளால் 1866–ம் ஆண்டிலேயே தொடங்கப் பட்டது. அவர் சித்தி பெற்று ஐந்து ஆண்டுகள் கழிந்த பின்னரே, 1879–ல் பிரசுரிக்கப் பட்டது. 'சன்மார்க்க விளக்கத்தின் முதற் பிரிவாகிய ஜீவகாருண்ய ஒழுக்கம்' என்னும் இந்நூலின் தலைப்பே ஜீவகாருண்யத்தின் முக்கியத்துவத்தைக் காட்டுகிறது. இதையே அடிகள் தம் பிரசங்கங்களிலும் கடிதங்களிலும் எடுத்து விளக்கினர். இது சாதி சமயங்கள்

எல்லாம் கடந்த பொது நெறி, பொது அறிவிலேயே உறைவது, ஆகவே எவரும் ஏற்றுக் கொள்வதற்கு உரியது, அதாவது 'சுத்த சன்மார்க்கம்', என்று மொழிந்தார் அடிகள்.

'சுத்த சன்மார்க்கச் சிறு விண்ணப்ப'த்தில் அடிகள் இறைவனைக் கோருகிறார்:

எல்லாம் உடைய அருட் பெருஞ்சோதி அற்புதக் கடவுளே! இது தொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கியத் தடையாகிய சமயங்கள் மதங்கள் மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும் வருணம் ஆசிரம முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்திற் பற்றாத வண்ணம் அருள் செய்தல் வேண்டும்.

சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லக்ஷியமான ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும்.

எல்லாமாகிய தனிப்பெருந் தலைமை அருட் பெருஞ்சோதி ஆண்டவரே! தேவரீர் திருவருட் பெருங் கருணைக்கு வந்தனம்! வந்தனம்!

# அத்தியாயம் 11

## உயிரியக்கம்

'என் உயிர்தான் உயிரியக்கம்தான் ஒன்றதே இரண்டில்லை' என்று மொழிந்தார், ராமலிங்க வள்ளலார். 'இரக்கமே வடிவாம் வடலூரரான்' என்று அவருடைய உருவைச் சிறு சொற்களில் முழுதும் தீட்டினார் தண்டபாணி சுவாமிகள்.

மனிதனின் ஆத்ம வளர்ச்சிக்கு உரிய தனி சாதனம் ஜீவகாருண்யம் என்ற தத்துவத்தை அடிகள் எடுத்துக் காட்டிய நியாயமுறையும் ஞானமுறையும் மனிதகுலத்தின் தெய்வீகத் தன்மைக்குச் சிகரமே எனக் கூறலாம். 'ஜீவ காருண்யம் ஆத்மாவின் இயற்கை குணமே' என்றார் அவர். அவருடைய சொற்படியே, அவருடைய இக்குணம் அவருடைய ஆத்ம ஒளியின் சுடரை நமக்கு வெளிக்காட்டுகிறது.

அவருடைய பாடல்கள் ஜீவகாருண்ய இறக்கைகளுடன் சிறகடிக்கும் உயிர்ப் பறவைகள் போல் இருக்கின்றன. அவருடைய பாடல்களில் சிலவற்றை, வெவ்வேறு இடங்களிலிருந்து எடுத்துக் கூட்டிக் கீழே தருகிறோம்:

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
  வாடினேன் பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
  வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்
  நேர்உறக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னிகளாய் ஏழைக ளாய்நெஞ்
  சிளைத்தவர் தமைக் கண்டே இளைத்தேன்.

எட்டரும் பொருளே திருச்சிற்றம் பலத்தே
இலகிய இறைவனே உலகில்
பட்டினி உற்ருேர் பசித்தனர் களையால்
பரதவிக் கின்றனர் என்றே
ஒட்டிய பிறரால் கேட்டபோ தெல்லாம்
உளம்பகீர் எனநடுக் குற்றேன்
இட்டஇவ் வுலகில் பசிஎனில் எந்தாய்
என்னுளம் நடுங்குவ தியல்பே.

காணுறு பசுக்கள் கன்றுக ளாதி
கதறிய போதெல்லாம் பயந்தேன்
ஏணுறு மாடு முதல்பல விருகம்
இளைத்தவை கண்டுளம் இளைத்தேன்
கோணுறு கோழி முதல்பல பறவை
கூவுதல் கேட்டுளங் குலைந்தேன்
வீணுறு கொடியர் கையிலே வாளை
விதிர்த்தல்கண் டென்என வெருண்டேன்.

உரத்தொரு வருக்கங் கொருவர் பேசியபோ
துள்ளகம் நடுங்கினேன் பலகால்
கரத்திஞல் உரத்துக் கதவுதட் டியபோ
தையவோ கலங்கினேன் கருத்தில்
புரத்திலே அம்மா அப்பனே ஐயோ
எனப் பிறர் புகன்றசொல் புகுந்தே
தரத்தில் என் உள்ளத்தைக் கலக்கிய கலக்கம்
தந்தைநீ அறிந்தது தானே.

விண்டபோ தகரும் அறிவரும் பொருளே
மெய்யனே ஐயனே உலகில்
தொண்டனேன் தன்னை அடுத்தவர் நேயர்
சூழ்ந்தவர் உறவினர் தாயார்
கொண்டுடன் பிறந்தோர் அயலவர் எனும்இக்
குறிப்பினர் முகங்களில் இளைப்பைக்
கண்டபோ தெல்லாம் மயங்கினன் னுள்ளம்
கலங்கிய கலக்கம்நீ அறிவாய்.

சீர்த்தசிற் சபைஎன் அப்பனே எனது
தெய்வமே என்பெருஞ் சிறப்பே
ஆர்த்தஇவ் வுலகில் அம்மையார் துணைவர்
அடுத்தவர் உறவினர் நேயர்
வேர்த்தமற் றயலார் பசியினுல் பிணியால்
மெய்யுளம் வெதும்பிய வெதுப்பைப்
பார்த்தபோ தெல்லாம் பயந்தென துள்ளம்
பதைத்ததுன் உளம்அறி யாதோ.

பரைத்தனி வெளியில் நடம்புரிந் தருளும்
பரமனே அரும்பெரும் பொருளே
தரைத்தலத் தியன்ற வாழ்க்கையில் வறுமைச்
சங்கடப் பாவியால் வருந்தி
நரைத்தவர் இளையர் முதலினோர் எனையோர்
நண்பன் என் றவரவர் குறைகள்
உரைத்தபோ தெல்லாம் நடுங்கினன் னுள்ளம்
உடைந்த துன் உளம்அறி யாதோ.

புலால் உண்பது ஆத்ம இயற்கைக்கு விரோதமானது என்று அவர் அதைக் கண்டித்தார். புலால் உண்போரை சன்மார்க்க சங்கத்தில் சேர்த்துக் கொள்ளலாகாது என்று அவர் ஒதுக்கிவிட்டார். இவ்வாறு செய்ய இறைவனே தமக்குத் தெரிவித்ததாகக் கூறினார்:

உயிர்க்கொலையும் புலைப் பொசிப்பும் உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர் அவர் புறஇனத்தார் அவர்க்குப்
பயிர்ப்புறும்ஓர் பசிதவிர்த்தல் மாத்திரமே புரிக
பரிந்து மற்றைப் பண்புரையேல் நண்புதவேல் இங்கே
நயப்புறு சன்மார்க்கம் அவர் அடையளவும் இதுதான்
நம் ஆணை என்றெனக்கு நவின்ற அருள் இறையே
மயர்ப்பறு மெய்த் தவர்போற்றப் பொதுவில்நடம் புரியும்
மாநடத்தென் அரசேஎன் மாலைஅணிந் தருளே.

புலால் உண்போர் ஞானிஆகார் என்று அவர் அறைந்தார்:

மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்தில்
கண்விழித்து வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி இறந்தவரை
எழுப்புகின்ற உறுவ னேனும்
கருவாணை யுறஇரங்கா துயிருடம்பைக்
கடிந்துண்ணுங் கருத்த னேல்எங்
குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானிஎனக் கூறொ ணாதே.

புலால் உண்பதை நினைத்துப் பார்க்கையிலேயே அவர் உளம் வெதும்பி, உடம்பு கருகுகிறார்:

புண்புலால் உடம்பின் அசுத்தமும் இதனில்
புகுந்துநான் இருக்கின்ற புணர்ப்பும்
என்பொலா மணியே எண்ணிநான் எண்ணி
ஏங்கிய ஏக்கம்நீ அறிவாய்
வன்புலால் உண்ணும் மனிதரைக் கண்டு
மயங்கிஉள் நடுங்கிஆற் றாமல்
என்பெலாம் கருக இளைத்தனன் அந்த
இளைப்பையும் ஐயநீ அறிவாய்.

ஜீவன்கள் கொல்லப் படுவதையோ, அவைகளைக் கொல்லும் சாதனங்களையோ அவர் பார்க்கச் சகியார்:

துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்
கண்ணினாலேயோ பிறவுயிர் பதைக்கக்
கண்ட காலத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையுந் தூண்டிலும்
கண்ணிவகைகளும் கண்டபோதெல்லாம்
எண்ணியெனுள்ளம் நடுங்கிய நடுக்கம்
எந்தைநின் திருவருளறியும்.

உயிர்ப்பலியைக் கண்டித்து, புலால் கேட்கும் தெய்வங்களை 'நலிதரும் சிறு தெய்வம்' என்றும், இவற்றின் கோவில்களை 'வெங்கோயில்' என்றும் செஞ்சொற்களில் நிந்திக்கிறார்:

நலிதரு சிறிய தெய்வமென் றையோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்

பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்
பலிக்கடா முதலிய உயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே
புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுரு சிறிய தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன்.

இக்கதறல்கள் எல்லாம் சேர்ந்து இறைவனுக்கு ஒரு பிரார்த்தனையாக மாறி எழுகின்றன:

கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த
கடுந்துயர் அச்சமா திகளைத்
தருணநின் அருளால் தவித்தவர்க் கின்பம்
தரவும்வன் புலைகொலை இரண்டும்
ஒருவிய நெறியில் உலகெல்லாம் நடக்க
உஞற்றவும் அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்.

இங்ஙனம் அவர் தம் கருணை நெறியை, பிறரை நிந்தியாமல், கடவுள் முன்னிலையில் சமர்ப்பித்துக் கொள்ளுவதினால், அந்நெறிக்கு உகந்திலாதவர்கள் அவரை நிந்திக்க இடமில்லாமற் செய்து விடுகிறார்.

புலால் உண்போர் பலர் அடிகளின் திருவருளினால் புலால் மறுப்போராயினர். இங்ஙனம் மக்களைப் புலால் உணவிலிருந்து சைவ உணவிற்கு மாற்றக் கூடிய ஒரு தனி ஆற்றல் அடிகளுக்கு இருந்தது என்றும், அவருடைய பார்வை ஒன்றே புலால் உணவில் ஒருவருக்கு இருக்கக் கூடிய இச்சையை ஒழிக்க வல்லதாய் இருந்தது என்றும் அவருடைய மாணக்கர் தொழுவூர் வேலாயுத முதலியார் கூறுகிறார்.

அடிகளின் ஜீவகாருண்ய ஒழுக்க நெறியைப் பற்றிய தத்துவ விளக்கங்களை ஏற்கனவே 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்' என்ற முந்திய அத்தியாயத்தில் கூறியுள்ளோம். மனிதன் ஜீவராசிகளின் பால் வைக்கும் உறவே அவனுக்குக் கடவுள்பால் இருக்கும் உறவுக்கு விளக்கமாகும், ஆகவே அதுதான் அவனுடைய ஆத்ம வளர்ச்சிக்கும் பூரணத்துக்கும் உரிய தனி சாதனம் என்கிருர் அடிகள்.

# அத்தியாயம் 12

## திருவருட்பா

1858 முதல் 1867 வரை நீடித்த அடிகளின் கருங்குழி வாசம், அவர் அங்கிருக்கையில் (1865–ல்) நிறுவிய சன்மார்க்க சங்கம், பின் வந்த (1867 முதல் 1870 வரை நீடித்த) அவருடைய வடலூர் வாசத்திற்கு வித்தாய் இருந்தது. மேலும் அது, சென்னைவாசம் அடங்கிய அவருடைய முதலிரு வாழ்க்கைப் பகுதிகளுக்கு ஒரு நிலையான உருக் கொடுத்தாற் போல் அமைந்தது. இந்த இரண்டாம் சிறப்பு அவருடைய பதிகங்களும் பாடல்களும் அவருடைய மாணுக்கர்களால் பிரசுரிக்கப் பட்ட காரணத்தினுல் ஏற்பட்டது.

இந்தப் பணியைத் தாங்களே ஏற்றுக் கொண்டு செயற்படுத்தியவர்கள் அடிகளின் அன்பர்களுள் மூவர்: புதுவை வேலு முதலியார், செல்வராயபுரம் சிவானந்த முதலியார், இறுக்கம் ரத்தின முதலியார் ஆகியோர். இம் மூவரில் ரத்தின முதலியாருக்கு நாம் அதிகமாகக் கடமைப் பட்டிருக்கிறோம்.

அடிகள் சென்னை வாழ்வை நீக்கும் தறுவாயிலேயே ரத்தின முதலியார் அடிகளின் பாடல்களை முறையாக அச்சிட்டுப் பிரசுரிக்க வேண்டும் என்ற கருத்துக் கொள்ளலாயினர். சென்னையில் சிலர் அடிகளின் பாடல்கள் சிலவற்றை, முறையின்றி, அச்சுப் பிழைகளுடன், பல சிறிய புத்தகங்களாகக் கொண்டு வருவதில் முனைந்திருந்தனர். அவர்களுக்கு ஏதாவது தொகை அளித்து இதை நிறுத்த முயன்றுர் ரத்தின முதலியார். அவருடைய முயற்சிகள் பலிக்கவில்லை. ஆகவே அவர் தீவிரமாக அடிகளின் பாட்டு ஏடுகளைச் சேகரிப்பதில் முனைந்தார், 1860–ல் அவர் இந்த முயற்சியைத் தொடங்கினுர். அவற்றைப் பிரசுரிக்க அடிகளின் அனுமதியை வேண்டியும், பிற ஏடுகளை அனுப்பி வைக்கும்

படியாகவும் அடிகளுக்குப் பல முறை கடிதம் எழுதினார். அடிகள் இவ்விஷயத்தில் அசட்டையாய் இருந்தார். கடைசியில் ரத்தின முதலியார், தம்மிடம் பாடல்கள் வந்து சேரும் வரை தாம் தினம் ஒரு வேளையே உணவு கொள்ளப் போவதாக அடிகளிடம் தெரிவித்தார். 1860–ம் ஆண்டு டிசம்பர் 30–ம் தேதியிட்ட கடிதத்தில் அடிகள் தாம் அவருக்குத் தம் பாடல் ஏடுகளை இரண்டு மாதங்களுக்குள் அனுப்பிவைப்பதாகவும், ஒரு வேளை உண்ணும் நோன்பைத் தவிர்க்கும்படியாகவும், அங்ஙனம் அவரிடமிருந்து தெரியும் வரை தாமும் ஒரு வேளையே உண்ணப்போவதாகவும் எழுதினார். இங்ஙனம் ரத்தின முதலியார் அடிகளுக்கு ஆறு ஆண்டுகள் கடிதம் எழுதியும் நேரில் விண்ணப்பித்தும் நோன்பெடுத்தும், கடைசியாக 1867–ம் ஆண்டு பிப்ரவரியில் நூலைக் கொணர்ந்தார். பாடல்களைத் தொகுத்து, திருமுறைகளாக வகுத்துப் பதிப்பித்தவர் அடிகளின் முதல் மாணாக்கரான தொழுவூர் வேலாயுத முதலியார். நூலுக்கு 'திருஅருட்பா' எனப் பெயர் சூட்டியவரும் அவரே. மேலும் அவர் அறுபத்தி ஆறு பாக்களில் 'திருஅருட்பா வரலாறு' எனும் அஞ்சலியை நூலில் சேர்த்து வெளியிட்டார். நூலில் அச்சகத்தின் பெயர் ஆங்கிலத்தில் கொடுக்கப் பட்டிருக்கிறது: 'ஏஷியாடிக் பிரஸ்', 292 லிங்கிச் செட்டித் தெரு, சென்னை. பிரசுரத்திற்குக் கொடையுதவி செய்தவர் மயிலாப்பூர் சோமசுந்தர செட்டியார்.

இங்ஙனம் நூலைக் கொண்டு வருவதற்கு ஏற்பட்ட நீண்ட கால முயற்சியில், 1866 மார்ச்சு மாதத்தில், ரத்தின முதலியார் அடிகளின் பெயரை ராமலிங்க சுவாமிகள் என்று அச்சிடுவதற்கு அடிகளின் அனுமதியைக் கோரினார். அதற்கு அடிகள் ஒப்பவில்லை. 'இராமலிங்க சாமி என்று வழங்குவிப்பது என் சம்மதமன்று. என்னை? ஆரவாரத்திற்கு அடுத்த பெயராய்த் தோன்றுதலில். இனி அங்ஙனம் வழங்காமை வேண்டும்,' என்று எழுதினார். இந்நிலையில், எப்படியாவது அடிகளைச் சிறப்பித்து வழங்க வேண்டும் என்று தொழுவூர் வேலாயுத முதலியார், நூலின் முகப்பேட்டில் தாமே, 'திருவருட் பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பரம்

இராமலிங்க பிள்ளை அவர்கள்' என்று அடிகளைக் குறிப்பிட்டார். மேலும் இந்தச் சிறப்புப் பெயராலேயே அடிகளை, தாம் எழுதிச் சேர்த்த திருவருட்பா வரலாற்றிலும் குறிப்பிட்டார். இதைப் பிறகு கண்ட அடிகள் வருந்தினர். பின்னர், "'திருவருட்பிரகாச வள்ளல் ஆர்?' என்று கேட்கும் இராமலிங்கம் என்று வைத்துக் கொள்ள வேண்டுமோ?" என்று கூறி, சமாதானப் படுத்திக் கொண்டார்.

இங்ஙனம் அடிகள் அருளிய அருட்பாக்கள் நூல் உருவில் பிரசுரிக்கப்பட்ட வரலாற்றில் நாம் லௌகிக விவகாரங்கள் ஒட்டாமல் நின்ற அடிகளின் குணச்சிறப்பைக் காண்கிறோம். அவர் இது சம்பந்தமாகவே "ஜீவகாருண்யமும் சிவானுபாவமும் அன்றி மற்றவைகள் மனத்தின் கண்மதியாதிருத்தல் வேண்டும்," என்று ரத்தின முதலியாருக்கு எழுதினார். இதே சிறப்பை நாம், நூல் வெளிவந்த பிறகு, அதை யொட்டி ஏற்பட்ட ஒரு விளைவிலும் காண்கிறோம்.

நூல் வெளிவந்த பொழுது அடிகள் கருங்குழியை விட்டு வடலூருக்கு வந்தாகி விட்டது. அக்காலத்தில் அவர் வடலூரிலும், பின்னர் மேட்டுக் குப்பத்திலும், சமயக் கோட்பாடுகளை எல்லாம் சழக்குகள் என உதறித் தள்ளி, வேத, ஆகம, சாத்திர, புராண, இதிஹாஸ முடிவுகளை எல்லாம் அப்புறப் படுத்தி, தாமே ஆத்மானுபவத்தால் வகுத்துக் கொண்ட சன்மார்க்கத்தில் முன்னேறிக் கொண்டிருந்தார். பண்டைய மதாச்சாரங்களை அவர் மீறிச் சென்றது பலருக்குப் பிடிக்கவில்லை. அவர்களில் முக்கியமானவர்-ஆறுமுக நாவலர் எனும் பழுத்த சைவர். அவர், 'திருவருட்பா' எனும் சிறப்புப் பெயர் சைவப் பெரும் குரவர்களுக்குப் பின் தோன்றிய எவருக்கும் கொடுக்கப் படாதிருக்க, மருட்பாக்களாலான ராமலிங்கரின் நூலுக்குக் கொடுப்பது அபசாரம் என்றும், 'திருமுறை' என வழங்கத் தக்கவை பன்னிரு திருமுறைகளே என்றும் கருதினார். மேலும் வள்ளலாரின் சன்மார்க்கக் கொள்கை பிற மதங்களுக்கு, விசேஷமாக கிறிஸ்தவ மதத்திற்கு இடம்கொடுப்பது என்று கருதினார். (அதாவது, இந்து மதத்தில் நம்பிக்கை குறைந்தவர்கள் பிற மதங்களுக்குப் போக ஊக்கம்

பெறுவார்களென்று.) அடிகளின் பாக்கள் அருட்பாக்கள் அல்ல, மருட் பாக்கள் எனச்சாற்றி, போலி அருட்பா மறுப்பு என்ற கட்டுரை ஒன்றை 1868—ல் வெளியிட்டார். மறுப்பும் அதன் மறுப்பும் என்று மாறி மாறி வாதங்கள் கிளம்பின. ஆனால் பொதுவில், மக்கள் அடிகள் முற்றறிவினர் என்ற உறுதியில் அவரைப் பின் தொடர்ந்தனர். இது கண்டு நாவலருக்குச் சினம் எழுந்தது. தமது மறுப்புரைகள் மக்களிடையே செல்வாக்குப் பெருதது கண்டு, அவர் வழக்கில் இறங்கினர். அடிகள் சிதம்பரத்தில் செய்த சொற்பொழிவு ஒன்றில் தம்மை அவதூறு செய்ததுடன், அண்டியவர்களைக் கொண்டு தமக்கு தேகக்கேடு விளைவிக்கப் போவதாக அச்சுறுத்தியதாகவும் வழக்குத் தொடுத்தார். வழக்கு மஞ்சக்குப்பம் நீதி மன்றத்தில் 1869—ல் விசாரணைக்கு வந்தது. நாவலர் யாழ்ப்பாணம் சௌந்தர நாயகம் பிள்ளை என்னும் வழக்கறிஞரைத் தம் கட்சிக்கு மறையாளராக அமர்த்தினர். அடிகள் ஒருவரையும் நாடவில்லை.

விசாரணை நாளன்று, ஆணையேற்று, அடிகள் நீதி மன்றத்தில் நுழைகையில் அங்கு திரண்டிருந்த மக்கள் அனைவரும் பல ஜீவன்கள் அடங்கிய ஒரு ஜீவன் போல் எழுந்து கை கூப்பி, அடிகளுக்கு வழிவிட்டு விலகி நின்றனர். நாவலரும் அங்ஙனமே செய்தார். நீதிபதியும், தம்மை யறியாமல், பாதி எழுந்தார். ஆனல் அவ்வாறு நிற்பது மன்ற முறைக்கு முரண் என்ற பின்யோசனையில், அமர்ந்தார். வழக்கைத் தொடங்கினர். பிரதிவாதி நுழைந்த போது வாதியகிய நாவலர் ஏன் எழுந்து நின்றார் என்று அவரை நீதிபதி வினவினர். அனைவரும் எழுந்திருக்கவே தாமும் எழுந்து நின்றதாக நாவலர் பதிலளித்தார். அனைவரும் ஏன் அவ்வாறு எழுந்து நின்றனர் என்று நீதிபதி தொடர்ந்து கேட்டார்.

'பெரியவருக்குக் காண்பிக்கும் மரியாதை,' என்றார் நாவலர்

'நீரும் எழுந்தீரே,' என்றார் நீதிபதி.

'ஆம்,' என்றார் நாவலர்.

'நீர் எழுந்ததும் பிறர் எழுந்த காரணத்தைத் தானே காட்டும்?'

'ஆம்.'

'அப்படியானால், பிரதிவாதி பெரியவர் என்று நீர் ஒப்புக் கொள்கிறீர். நீர் எழுந்ததும் அல்லாமல், மற்றவர்களைப் போல் கைகளையும் கூப்பினீர். பின் ஏன் அவர் மீது வழக்குத் தொடுக்கிறீர்? வழக்கைத் தொடுத்தவர் இப்படி எழுந்திருக்க வேண்டாம், கை கூப்ப வேண்டாம். இது வழக்குத் தொடுப்பவர்களின் செயலாய் இல்லை. உள்ளிருந்து எழுந்த உம் செயல் வாய் சொல்லாத உண்மையைச் சொல்லுகிறது. வீண் விசாரணை ஏன்? வழக்கை இத்துடன் தள்ளுபடி செய்கிறோம்' என்றார் நீதிபதி.

1867–ம் ஆண்டில் வெளிவந்த திருவருட்பாவின் முதற் பதிப்பில், பின்னர் பூர்த்தி செய்யப்பட்ட திருமுறைகள் ஆறில் முதல் நான்குதான் அடங்கியிருந்தன. பிறகு, 1880–ல், அடிகளின் திருத்தணிகைப் பாடல்கள் ஐந்தாம் திருமுறையாகத் தொழுவூர் வேலாயுத முதலியாரால் வெளியிடப்பட்டன. பிரசுரத்திற்கு அடிகளின் ஆணை பெறாத பிற பாடல்கள் – அதாவது அவர் பிற்காலத்தில் பாடிய சுத்த சன்மார்க்க நெறிக்குரிய பாடல்கள் 1885–ல், வேலூர் பத்மநாப முதலியார், பெங்களூர் இராகவலு நாயக்கர், ஆகியோரின் முயற்சியால், தி.க. சுப்பராயச் செட்டியாரால் பார்வையிடப் பட்டு, திரிசிரபுரம் லோகநாத செட்டியாரால் ஆறும் திரு முறையாகப் பிரசுரிக்கப்பட்டது. திருவருட்பா குணத்தில் மாத்திரம் இல்லாமல், தொகையிலும் அசாதாரணமான அரும் பெரும் நூல்.

# அத்தியாயம் 13

## அடிகளின் குணாதிசயங்கள்

அடிகளின் தோற்றம், பழக்க வழக்கங்கள், குணாதிசயங்கள் முதலியவற்றை இங்கு நோக்குவது பொருந்தும்.

அடிகள் மிகுந்த தேஜசும் காந்தமும் உடையவர். மறக்க வொண்ணு முகம். கருணைபொழியும் கண்கள். திரு ஊரன் அடிகள் கூறுகிறார்:

> அடிகளின் திருவுருவை அவரருளே கண்ணுகக் கொண்டு காணின் அல்லால் இப்படியார், இந்நிறத்தர், இவ்வண்ணத்தர், இவர் இராமலிங்கர் என்றெழுதிக் காட்டொணுது. அடிகளின் திருமேனி நிழற்படத்திலடங்காத திருமேனி. அடிகளை நிழற்படம் (photo) எடுக்க முயன்றும் முடியவில்லை. நிழல் சாயாத் திருமேனியை நிழற்படம் எடுக்க இயலுமோ?

தொழுவூர் வேலாயுத முதலியார், பிரம்மஞான சங்கத்திற்கு அளித்த வாக்கு மூலத்தில் அடிகளைப் பின்வருமாறு (ஆங்கிலத்தில்) வருணிக்கிறார்:

> தோற்றத்தில் ராமலிங்கர் நடுத்தர உயரம்; மெலிந்த தேகம் உடையவர். எலும்புத் தோற்றம். மெலிந்திருந்தாலும் வலிமை உடையவர். நிமிர்ந்த தோள்கள், மிகவும் வீச்சான நடை, மாசில்லாத பழுப்பு நிறம், மெல்லிய, நேரே இயங்கும் மூக்கு. ஒளி பறக்கும் அகலமான கண்கள். அவைகளில் எப்பொழுதும் அமர்ந்திருக்கும் சிந்தனைக் குறி .... அவர் உடுத்தியது இரண்டே வெண்மையான ஆடைகள். எப்போதாவது ஓய்வெடுத்தார் என்பதில்லை. உணவு பெயருக்குத்தான். சைவ

உணவினர். இரண்டு மூன்று நாட்களுக்கு ஒரு முறைதான் உண்பார். அப்படி உண்பதும் சில கவளங்கள் அரிசிதான். அவ்வப்போது பட்டினி என்று போகையில், இரண்டு மூன்று மாதங்கள் வெறும் சர்க்கரைத் தண்ணீர்தான்.

ஞானக் கவியாகிய ராமலிங்கர் இறைவனுக்குப் பாமாலை சூட்டுவதிலும், தம் விண்ணப்பங்களை முறையிட்டுக் கொள்ளுவதிலும், தம்மைப் பற்றி இறைவனிடம் பேசிக்கொள்கிறார். ஆகவே அவர் பாடல்களில் அவரைப் பற்றிப் பல விஷயங்களும் விவரங்களும் நமக்குத் தெரிய வருகின்றன. அவரைப் படம் பிடித்துக் காட்டும் செஞ்சித்திரங்கள் கிடைக்கின்றன. இது ஓர் அபூர்வமான குண விசேஷம். தம் உடல் வாகு, உடை, உணவு முதலியவற்றைக் கூடக் குறிப்பிடுகிறார்.

தம் உடல் மெலிவையும் உள்ள மெலிவையும் குறிப்பிடுகிறார்கள்:

வேகமுறு நெஞ்ச மெலிவும் எளியேன்றன்
    தேகமெலிவும் தெரிந்தும் இரங்காயேல்
மாக நதியும் மதியும் வளர்சடைஎம்
    ஏகஇனிமற் றெனக்கார் இரங்குவரே.

கள்ள மனத்துக் கடையோர்பால் நாணுறும்என்
உள்ள மெலிவும் உடல் மெலிவும் கண்டிருந்தும்
எள்ளின் அளவும் இரங்கி அருளாயேல்
எள்ளும் உலகில் எனக்கார் இரங்குவரே.

அவருடைய ஆடை இரண்டே இரண்டு வெள்ளைத் துணிகள், அவருடைய உடம்பைக் கவரும் வகையில். இரண்டு லாங்கிளாத் (long cloth) துண்டுகள். வெள்ளாடை உடுத்துவது சைவக் குரவர்களின் மரபு. அடிகள் கூறுகிறார்:

சந்நியாசி காவி வேஷ்டி போடுவதற்கு ஞாயம்; தயவில்லாத கடின சித்தர்களாகையால் தத்துவாபாசமுள்ளது. தத்துவத்தைச் செயித்து தயவை நடத்துவதற்கு யுத்தக்குறி (அல்லது) அடையாளமாகத் தரிப்பது காவி. வெற்றியான பிறகு அடைவது தயவு. ஆதலால் வெற்றிக் கொடி வெள்ளை.

தாம் வெண்துகில் உடுத்துவதை அவர், தம்மைப் பற்றி வேறு சில விவரங்களையும் தரும் பாடல் (விண்ணப்பம்) ஒன்றில் குறிப்பிடுகிறார்:

கையுற வீசி நடப்பதை நாணிக்
கைகளைக் கட்டியே நடந்தேன்
மெய்யுறக் காட்ட வெருவிவெண் துகிலால்
மெய்எலாம் ஐயகோ மறைத்தேன்
வைய மேல் பிறர்தம் கோலமும் நடையும்
வண்ணமும் அண்ணலே சிறிதும்
பையநான் ஊன்றிப் பார்த்ததே இல்லைப்
பார்ப்பனேல் பயமிகப் படைப்பேன்.

அடிகள் நடக்கும் அடக்கத்தைக் காட்டும் இப்பாடல், அடிகளின் நடைச் சித்திரமாகவே அமைந்திருக்கிறது.

ஆடையில் படாடோபத்தைப் புறக்கணித்தார்:

நயந்தபொற் சரிகைத் துகில்எனக் கெனது
நண்பினர் உடுத்திய போது
பயந்தஅப் பயத்தை அறிந்தவர் எல்லாம்
பயந்தனர் வெய்யலிற் கவிகை
வியந்துமேற் பிடித்த போதெல்லாம் உள்ளம்
வெருவினேன் கைத்துகில்வீசி

அயந்தரு தெருவில் நடப்பதற் கஞ்சி
    அரைக்குமேல் வீக்கினன் எந்தாய்.

கற்புப் போன்ற அவருடைய அடக்கமும் ஒடுக்கமும் பின்வரும் விண்ணப்பத்தில் தெரிகிறது:

காட்டுயர் அணைமேல் இருக்கவும் பயந்தேன்
    காலின்மேல் கால் வைக்கப் பயந்தேன்
பாட்டயல் கேட்கப் பாடவும் பயந்தேன்
    பஞ்சணை படுக்கவும் பயந்தேன்
நாட்டிய உயர்ந்த திண்ணைமேல் இருந்து
    நன்குறக் களித்துக் கால்கீழே
நீட்டவும் பயந்தேன் நீட்டிப்பே சுதலை
    நினைக்கவும் பயந்தனன் எந்தாய்.

அடிகள் உணவை வெறுத்தார். உணவும் உறக்கமும் ஊன் தேகத்தின் நிர்ப்பந்தங்கள் எனக் கருதினார். இளம் வயதில் சில காலம் நாள் இருமுறை உண்டார். பிறகு சில காலம் நாள் ஒருமுறை உண்டார். இதனை அவர் தம் பாடல்களில் குறிப்பிடுகிறார்:

இரவும் பகலும் தூங்கியஎன் தூக்கம் அனைத்தும் இயல்யோகத்
    திசைந்த பலனாய் விளைந்ததுநான் இரண்டு பொழுதும் உண்டஎலாம்....

கேளனந் தான்ஒரு போதுண் டனைமனக் கேதம் அற
நீளனம் தேடு முடியான் எதுநினைக் கீந்த தென்றே
வேளனம் போல் நடைமின்னாரும் மைந்தரும் வேடிக்கையாய்
ஏளனம் செய்குவர் நீஅருளாவிடில் என் அப்பனே.

பின்னர் அவர் இரண்டு மூன்று நாட்களுக்கு ஒருமுறையே உண்பார். உண்பதும் சில கவளங்களே. இதன் நடுவில் அடிக்கடி இரண்டு மூன்று மாதங்கள் பட்டினி கிடப்பார். இக்காலங்களில் சர்க்கரைத் தண்ணீரைத் தவிர வேறொன்றும் எடுத்துக்கொள்ள மாட்டார். பின்னர் அவர் உணவை முற்றும் நீத்துவிட்டதாகச் சொல்லப் படுகிறது.

உணவு சம்பந்தமாய் அவர் சாற்றுகிறார்:

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடில் ஒருவன்

துன்னுநல் தவம்எலாஞ் சுருங்கி

ஆற்றிலே கரைத்த புளிஎனப் போம்....

உணவைப் போல் அவர் உறக்கத்தையும் சுருக்கினார். தம் சீடர்களுக்கு, 12 மணி முதல் 3 மணி வரைதான் உறங்கவேண்டும் என்று அவர் அறிவுரை கூறினார். தூக்கத்தைக் குறைத்தால் ஆயுள் நீளும் என்று போதித்தார். ஒரு நாளைக்கு இரண்டரை நாழிகைக்குத் தூக்கத்தை அடக்கினால் ஒருவன் ஆயிரம் வருடம் வாழ்வான் என்றார். அவர் இளமையில் தினம் மூன்று மணிநேரமும், பின்னர் இரண்டு மணியும், அதன்பின்னர் ஒரு மணி நேரமும் தூங்கியதாகவும், இறுதியில் உறங்குவதே இல்லை என்றும் அவருடைய சீடர்கள் கூறுகின்றனர். அவரும் இறைவனை 'தூக்கம் தொலைத்த துணையே,' என்று பாராட்டுகிறார். தூக்கத்தை வெல்ல அவர் பட்ட பாட்டைக் காண்பிக்கிறார்:

அந்தமோ டாதி யில்லாதோர் பொதுவி

லரும்பெரும் ஜோதியே யடியேன்

சொந்தமோ வறியேன் டகலிரவெல்லாந்

தூக்கமே கண்டனன் தூக்கம்

வந்தபோ தெல்லாம் பயத்தொடும் படுத்தேன்

மந்றுநா னெழுந்தபோ தெல்லாந்

தொந்தமாம் பயத்தாற் சிவசிவ தூக்கந்
தொலைவதெக் காலமென் றெழுந்தேன்.

தூக்கத்தை ஏசி வெளியேற்றுகிறார்:

தூக்கமெனுங் கடைப்பயலே சோம்பேறி யிதுகேள்
துணிந்துனது சுற்றமொடு சொல்லுமரைக் கணத்தே
தாக்குபெருங் காட்டகத்தே யேகுகநீ யிருந்தால்
தப்பாதுன் தலைபோகுஞ் சத்தியமீ தறிவாய்
ஏக்கமெலாந் தவிர்த்து விட்டே னூக்கமெலாம் பெற்றேன்
இன்புறு கின்றேனீ யென்னையடை யாதே
போக்கில் விரைந்தோடுகநீ பொற்சபைசிற் சபைவாழ்
பூரணர்க்கிங் கன்பான பொருளனென வறிந்தே.

அவருடைய மனசுத்தமும் யதார்த்தமும் ஒடுக்கமும் அருளொளியும் பார்ப்பவர்களுக்குப் பளிச்சிட்டன. 'மகான்களின் கடைசிச்சபலம்' என்று ஆங்கிலக் கவி மில்டன் குறிப்பிடும் புகழாசை என்பதை அவர் அறியார். தெய்வ ஜோதியில் தம்மை இருத்திக் கொண்டவரை சபலங்கள் எப்படி எட்டும்? இறைவனிடம் அவர் முறையிடுகிறார்:

அவ்வண்ணம் பழுத்தவரும் அறிந்திலர்சற் றெனினும்
அறிந்தனம்ஓர் சிறிதுகுரு அருளாலே அந்தச்
செவ்வண்ணம் பழுத்ததனித் திருஉருக்கண் டெவர்க்கும்
தெரியாமல் இருப்பம்எனச் சிந்தைசெய் திருந்தேன்

இவ்வண்ணம் இருந்தளனைப் பிறர் அறியத் தெருவில்
இழுத்துவிடுத் ததுகடவுள் இயற்கை
அருட்செயலோ
மவ்வண்ணப் பெருமாயை தன்செயலோ அறியேன்
மனம் ஆலை பாய்வதுகாண் மன்றில் நடத்தரசே.

இம்முறையீடைப் பத்துப் பாடல்களில் செய்கிறார்.

மேலும் மனிதனாகப் பிறந்தவனுக்குக் கடைசியாகக் கிட்டக் கூடிய வெற்றியான மனோ வெற்றியை அடைந்து விட்டார். மனத்தை ஒழித்துக் கடாசி விட்டார்:

மனமெனுமோர் பேய்க்குரங்கு மடைப்பயலே நீதான்
மற்றவர்போ லெனைநினைத்து மருட்டாதே
கண்டாய்
இனமுறவென் சொல்வழியே யிருத்தியெனிற்
சுகமாய்
இருந்திடுநீ யென்சொல்வழி யேற்றிலையா
னாலோ
தினையளவுன் னதிகாரஞ் செல்லவொட்டே னுலகஞ்
சிரிக்கவுனையடக்கிடுவேன் திருவருளாற்
கணத்தே
நனவிலெனை யறியாயோ யாரெனவிங் கிருந்தாய்
ஞானசபைத் தலைவனுக்கு நல்ல பிள்ளை நானே.

அடிகள் மண்ணுலகவாசிகளான நமது நோக்கில் பிடிபடாத ஒரு தனித்த சிறப்பான உலகில் நடமாடினார். கடைசிவரையில் அவர் ஒரு மர்மமாகவே இருந்தார். அவருடைய குணத்திற்கு ஹூஸ்டன் ஸ்மித் புத்தரைப் பற்றிக் கூறியுள்ள மொழிகள் நன்கு பொருந்தி இருக்கின்றன:

புத்தருடைய வாழ்க்கை முழுவதிலும் பிரபஞ்சரீதியாக அருஞ்செயல் ஒன்றைப் புரிய

> வேண்டியவர் தாம் என்ற உணர்வு வியாபித்திருக்கக் காண்கிறோம். அவருக்குச் சூட்டப்பட்டுள்ள புகழுரைகள் பல. ஆனால் இவற்றில் அவரைக் காண முடியாது. அவருள் உறைந்த மர்மத்தின் சாரத்தை வார்த்தைகளின் எத்தகைய நேர்த்தியான கோர்வையும் வெளிக் கொணர முடியவில்லை— வார்த்தைகள் சென்றடைய முடியாத ஆழம். எண்ணத்தின் வீச்சையும் மொழியின் திறன்களையும் மீறிய ஆழம். தங்கள் நடுவில் இருந்த அவரை மக்கள், தங்களுக்கு எட்டிய வரையில் நேசித்தனர், தொழுதனர். ஆனால் அவர்களுடைய புரிந்து கொள்ளும் திறனை மீறி நின்றது அவருடைய மகத்துவம். இறுதி வரையில் அவர் பாதி ஒளியும் பாதி இருளுமாக, முழுமையான கிரகிப்புக்கு அப்பாற்பட்டவராகவே விளங்கினார்.

அடிகளுடைய ஜீவகாருண்ய நெறியையும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்வையும் பற்றி முன்பு ஓர் அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறோம்.

'புத்தபிரானின் பெருங்கருணை அவருடைய உபதேசத்தை "கருணை ஊறிய மதம்" என உலகில் வழங்குவித்திருக்கிறது,' என்கிறார் ஹூஸ்டன் ஸ்மித். மனித குலத்தின் கருணை ராமலிங்க அடிகளிலே சிகரம் போன்ற உன்னதத்தை அடைந்தது என்று கூறினால் அது மிகையாகாது. ஜீவகாருண்யமே தெய்வநிலைக்கு வழி, ஒரே ஒரு தனி வழி என்று சாற்றினார் அவர். ஜீவகாருண்யத்தை இறைவனின் இயற்கைக் குணம் என்றார்; ஆத்மாவின் இயற்கையியல்பு என்றார். ஆன்ம நேய ஒருமைப் பாட்டை சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலக்காக்கினார், முதற் பிரிவாக்கினார். அதனால் ஜீவகாருண்யம் எங்கும் — மண்ணாங்கட்டியில் ஆரம்பித்து, எறும்பு முதல் யானை வரையில் — பரவி நிறைகிறது என்று விளக்கினார். ஜீவகாருண்யமே தெய்வ வழிபாடு, அதனால் கிட்டுவது தெய்வ நிலையே, தெய்வீக சித்தியே என்று உபதேசித்தார். அவரே இந்த நிலையை அடைந்தார். இத்தகைய குரலை, ஜீவகாருண்யத்தைப் பற்றிய குரலை, இத்தகைய உறுதியுடனும், ஞானத்துடனும், நியாயத்துடனும், பாடல்களில் ஒலிக்கும் கருணையுடனும்,

மென்மையுடனும், அழகுடனும் நாம் உலகில் அடிகளுக்கு முன்பும் கேட்டதில்லை, பின்பும் கேட்டதில்லை.

அடிகளுடைய பாடல்களில் சுரக்கும் உயிரிரக்கத்தையும் கருணையையும் ஞானத்தையும் காட்டுவதற்கு முன்பே பல உதாரணங்கள் தந்திருக்கிறோம். இதோ மேலும் சில உதாரணங்ள்:

எவ்வுயிரும் பொதுஎனக்கண் டிரங்கிஉப
கரிக்கின்றார் யாவர் அந்தச்
செவ்வியர்தம் செயல் அனைத்தும்.திருஅருளின்
செயல் எனவே தெரிந்தேன் இங்கே
கவ்வை இலாத் திருநெறிஅத் திருவாளர்
தமக்கேவல் களிப்பால் செய்ய
ஒவ்வியதென் கருத்தவர்சீர் ஓதிடஎன்
வாய் மிகவும் ஊர்வ தாலோ.

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் என நான் தெரிந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்
சிந்தைமிக விழைந்த தாலோ.

கருணை ஒன்றே வடிவாகி எவ்வுயிரும்
தம் உயிர்போல் கண்டு ஞானத்
தெருள்நெறியில் சுத்தசிவ சன்மார்க்கப்

பெருநீதி செலுத்தா நின்ற
பொருள்நெறிசற் குணசாந்தப் புண்ணியர்தம்
திருவாயால் புகன்ற வார்த்தை
அருள்நெறிவே தாகமத்தின் அடிமுடிசொல்
வார்த்தைகள் என் றறைவ ராலோ.

# அத்தியாயம் 14

## ஓர் அற்புதம், ஒரு கதை, ஒரு விவாதம்

அடிகள் கருங்குழியிலும் பின்னர் கடலூரிலும் உறைந்த காலத்தில் அவர் மக்களை விட்டு விலகித் தனி இருப்பை நாடவில்லை. மக்களின் மத்தியில் இருந்து கொண்டு, அவர்களுக்கு அருள் தந்து ஆட்கொண்டு வந்தார். மக்கள் அவரைக் காணவும், அவருடைய நல்மொழிகளைக் கேட்கவும், மனந் தேறவும், சங்கடம் தீர்த்துக் கொள்ளவும் திரண்டு வந்தனர். தங்கள் வீட்டை விட்டு அவர் அருகே இருக்க விழைந்தனர். அவரைத் தங்கள் இல்லங்களுக்கும், மங்கலச் சடங்குகளுக்கும் இசை நிகழ்ச்சிகளுக்கும், விரும்பி அழைத்தனர். அவருக்குச் சேவை செய்யக் காத்திருந்தனர். அவரைச் சுற்றிப் புராணங்கள் எழுந்துலாவின. இங்ஙனம் கூடிய மக்களுக்கு அவர் நாடோறும் மாலையில் அருளுரை கூறுவார். மற்ற நேரங்களில் பாடல்களும் பாமாலைகளும் இயற்றுவார், தியானம் செய்வார்.

கருங்குழியில் அடிகள் வேங்கட ரெட்டியாரின் வீட்டில் வசிக்கையில், ரெட்டியாரின் மனைவி முத்தியாலம்மாள் அடிகளின் அறையில் மாலைதோறும் ஒரு பெரிய அகல் விளக்கு ஏற்றி வைப்பாள். வேண்டிய போது அதில் விட்டு நிரப்புவதற்கு, அதன் பக்கத்தில் ஓர் எண்ணெய்க் கலம் இருக்கும். ஒரு நாள், இந்த மண்கலம் வாய் உடைந்து போகவே, அம்மையார் அதை மாற்ற வேண்டி, புதிய கலம் ஒன்று கொணர்ந்து, அதைப் பழக்குவதற்கு அதில் தண்ணீர் விட்டு, அதை அகலின் அருகே வைத்து விட்டு, அயலூர் சென்றார். அடிகள் இத் தண்ணீரக் கலத்தை எடுத்து அகலுக்கு வார்த்து நிரப்பிக் கொண்டு, இரவு முழுவதும் பாக்கள் வரைந்தவாறு இருந்தார். இரவு முழுமையும் அகல் எரிந்து கொண்டிருந்தது மறுநாட்காலை முத்தியாலு அம்மாள்

வீடுதிரும்பி வந்தார். அடிகள் பழைய எண்ணெய்க் கலத்திற்குப் பதிலாக புதிய தண்ணீர்க் கலத்திலிருந்த தண்ணீரை அகலுக்கு வார்த்து வந்ததை உணர்ந்தார், அதிசயத்தைக் கண்டார். தாம் செய்த தவறை உணராமல், அடிகள் ஓர் அற்புதம் செய்திருந்தார். இந்த ஆச்சரியத்தை அடிகளே தம் பாடல் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்:

மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக்
கில்லையென்றார் மேலோர் நானும்
பொய்விளக்கே விளக்கெனவுட் பொங்கிவழி
கின்றேனோர் புதுமை யன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர்
நண்பர்களே செப்பக் கேளீர்
நெய்விளக்கே போன்றொரு தண்ணீர் விளக்கு
மெரிந்தது சந்நிதியின் முன்னே.

இவ்வற்புதத்தை மதுரையாதீனம் சிதம்பர சுவாமிகளும் தொழுவூர் வேலாயுத முதலியாரும் தங்கள் பாடல்களில் குறிப்பிடுகின்றனர். இங்ஙனம் அடிகள் புரிந்த அற்புதங்களெனச் செவிவழியே வந்தவை ஏராளம். மாதிரிக்கு ஒன்று இங்கு.

கருங்குழியில் அடிகளுக்குத் தொண்டராய் அமைந்தவருள் ஒருவர் அப்பாசாமி செட்டியார் என்பவர். இக் காலத்தில் கடலூர் என்று வழங்கும் அக்காலத்திய கூடலூரைச் சார்ந்தவர். அவருடைய தமையனார் ராமசாமி செட்டியாருக்கு நாக்கில் தோன்றிய புண்ணை, அடிகள் அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கி, தம் அருளினால் திருநீறளித்துப் போக்கினார். அப்பாசாமி செட்டியாரும், நன்றி நிறைந்து, அடிகளைக் கடலூருக்கு வந்து தம் இல்லத்தில் தங்கி அருள வேண்டும் என்று அழைத்தார். பெருமானும் அங்ஙனமே 1866-ம் ஆண்டில் சில மாதங்கள் கடலூரில் தங்கினார்கள்.

ஒரு சமயம், கடலூரில், அப்பாசாமி செட்டியாரின் வீட்டுத்திண்ணையில் உரையாடிக் கொண்டிருந்த இரு வித்துவான்களிடையே ஒரு கடும் வாதம் எழுந்தது. ஒருவர், 'அவனன்றி ஓரணுவும் அசையாது,' என்ற முதுமொழி கொண்டு, 'நல்லது கெட்டது எல்லாம் ஆண்டவனுல் நடத்தி வைக்கப் படுகின்றன,' என்ருர். மற்ருெருவர் 'சீவனுல் வரும்,' என்ற கைவல்லியத்தின் பிரமாணம் கொண்டு, 'எல்லாம் ஜீவர்களின் வழியே நடக்கின்றன,' என்று வாதித்தார். வாதத்தில் முடிவு ஏற்படாமல் அவர்கள், 'இது பற்றிப் பெருமானிடம் தீர்த்துக் கொள்வோம்,' என்று உள்ளே சென்று அவரிடம் தங்கள் கட்சிகளை எடுத்துரைத்தனர். பெருமான் பின்வருமாறு கூறினுர்:

> சாத்திரப் பிரமானங்கள் வேண்டாம். நான் ஒரு கதை சொல்லுகிறேன், கேளுங்கள்.
>
> தெருவில் ஒரு சந்நியாசி நிர்வாணமாய்ப் போனுர். அது கண்ட ஒருவன், அவர் ஊனைக் கருதாத உயர்நிலைத்தவர் என்று எண்ணி, அவருக்கு ஒரு வாழைப்பழம் கொடுத்தான். அதே சமயம் மற்ருெருவன், 'பெண்கள் நடமாடும் நடுத்தெருவில் என்ன அவமானம் இது!' என்று அவரைக் கல்லால் அடித்தான். இதைக் தூரத்திலிருந்து கவனித்த மூன்ருமவன் அவர்களிருவரையும் சந்நியாசியையும் ஒரு நீதிபதியிடம் அழைத்துச் சென்று, அவரிடம் சமாசாரத்தைச் சொன்னுன். நீதிபதி சந்நியாசியை, 'உம்மை யார் அடித்தது?' என்று கேட்டார். சந்நியாசி, 'வாழைப்பழம் கொடுத்தவன் அடித்தான்,' என்ருர். 'வாழைப்பழம் கொடுத்தது யார்?' என்று கேட்டார் நீதிபதி. அதற்கு சந்நியாசி, 'கல்லால் அடித்தவன் வாழைப்பழம் கொடுத்தான்,' என்ருர். விந்தையைத் தொடர்ந்து நீதிபதி, 'யார் உம்மைக் கல்லால் அடித்தான்?' என்று கேட்டார். அதற்கு சந்நியாசி, 'இட்டுக் கொண்டு வந்தவன் கல்லால் அடித்தான்,' என்ருர். சந்நியாசியை விசாரித்துப் பயனில்லை என்று உணர்ந்த நீதிபதி, பிற விசாரணைகொண்டு, அடித்தவனை உரியபடி தண்டித்தார்.

> இம்முறையில், இந்த சந்நியாசியைப் போல், அடித்தவன் அடியாதவர்களை உணராமல், செயல்களைத் தம்முடையவை என்றும் இறைவனுடையவை என்றும் வேறுபடுத்தாமல், அனைவரையும் அனைத்தையும் கடவுள் என்று காணும் நிலையை அடைந்தவர்களுக்கு, 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது,' என்பது உண்மை. அவ்வாறு இல்லாமல், பழம் கொடுத்தவன், கல்லால் அடித்தவன், இட்டுச் சென்றவன், என்று தனித்தனியே பேதம் காணும் நிலையில் இருப்பவர்களுக்கு, 'இந்தச் சீவனால் வரும்,' என்பது பொருந்தும்.

இவ்வாறு அடிகள் விளக்கி, புலவர்கள் இருவரும், இருவாதங்களும் நிலைப்பது கண்டு, சமாதானம் அடைந்து சென்றனர்.

அடிகள் கடலூரில் இருக்கையில், பிரம்ம சமாஜத்துப் பிரமுகர் ஒருவரைச் சந்தித்து வாதிட நேர்ந்தது.

1867-ம் ஆண்டு ஜனவரி 16-ம் தேதியன்று கடலூரைச் சார்ந்த திருப்பாதிரிப்புலியூரை அடுத்த பெண்ணைநதித் தென் கரையில், உண்ணுமுலைச் செட்டிச் சாவடிக்கு சமீபத்தில் ஓர் நைமித்தியத் திருவிழாவிற்காக அனேகர் கூடினர். அடிகளும் அங்கிருந்தார். அப்போது பிரம்ம சமாஜத் தலைவர்களில் ஒருவரான சம்பேடு ஸ்ரீதரஸ்வாமி நாயக்கர் நம் சீடர் சிலருடன் அங்கு வந்தார். அந்த தருணத்தில் அடிகளுக்கும் ஸ்ரீதரஸ்வாமிகளுக்குமிடையே நிகழ்ந்த வாதத்தை ஆலப்பாக்கம் நாயனு ரெட்டியார் என்பவர் 'நடந்த வண்ணம் உரைத்தல்' எனும் தலைப்பில் அவ்வண்ணமே எழுதி வைத்திருந்தார். அது 1893-ம் ஆண்டில் சன்மார்க்க முன்னேற்றக் கழகத்தாரால் பிரசுரிக்கப்பட்டது. அதிலிருந்து சில பகுதிகள் பின் வருமாறு:

> அதற்குமுன் திருப்பாதிரிப் புலியூரில், ஸ்ரீதரஸ்வாமி நாயக்கர் செய்த பிரசங்கத்தினுற் சந்தேகத்திலழுந்திய சிலர் தமது சந்தேகத்தை நீக்கிக் கொள்வதற் கிஃதோர் தருணமென்று கருதி

**அக்கூட்டத்தில் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளை நோக்கி, 'ஐயா! பிரம்மத்தை நினைப்பது தகுதியென்றும் விக்கிரக ஆராதனை செய்வது தகுதியில்லவென்றும் இங்கே வந்திருக்கின்ற ஸ்ரீதரஸ்வாமி நாயக்கரவர்கள் எங்கள் முன்பாகப்** பலமுறை பிரசங்கித்தார். அதனால் எங்களுக்குச் சந்தேகமுண்டாகி யிருக்கின்றது. அந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்விக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்போது சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள், 'பிரம்மத்தையறியத் தொடங்கினோர் அறிதல் வேண்டும்; விக்கிரக ஆராதனை செய்யத் தொடங்கினோர் செய்தல் வேண்டும்; இவ்விரு வகையும் அதற்குரிய பக்குவர்களுக்கு அடுத்த வகைகளென்றறிய வேண்டும்,' என்று சொல்லினர்.

அப்போது அங்கிருந்தவர்களிற் சிலர் நாயக்கரைப் பார்த்து, 'இது விஷயத்தில் தங்கள் கோட்பாட்டை வெளிப்படுத்தி நிறுத்தல் வேண்டும்,' என்றார்கள். நாயக்கர் லிகித மூலமாய் வெளிப்படுத்து வேனென்றார்.

அது கேட்டு, 'ஒரு சபையில் மாறுபட்ட இருவர் .... வேறு வேறிடங்களிலிருந்து அறியர் சபாதி பத்தியமின்றித் தங்கள் மனஞ் சென்ற வழி அளவை யெல்லையைக் கடந்தெழுதிக் கொள்வதில் ஞாயந் தோன்றாது என்றும், ஒழியாத லிகிதச் சண்டையாக முடியுமென்றும் அது தர்க்க மரபல்ல,' என்றும் சுவாமிகள் சொல்லினர்.

உடனே நாயக்கர், 'நித்திய நிரஞ்சன நிர்ம்மல நிராமய நிராலம்ப சொரூபமும் அவாங் மனோகோசரமுமான பிரமத்தை நினைப்பது தக்கதென்றும், விக்கிரகாராதனை செய்வது தகாதென்பதும் எங்கள் பிரம்ம சமாஜ வேத சமாஜ கோட்பாடு', என்று வெளியிட்டார்.

'அவாங் மனோகோசரமான பிரமம், மனத்தினாலெப்படி நினைக்கப் படும்? ஆகாயம்

அடியாலும் படியாலும் அளக்கப்படும். காற்று கையாற்பிடிக்கப் படும் என்பவை போல், வார்த்தை மாத்திரத்தாலன்றி அர்த்த லக்ஷ்யானுபவங்களுக்கு இடம் பெறவில்லையே,' என்று சுவாமிகள் வினவினர்.

'மிதக்கியானமுள்ள நம்மிட மனத்திற்குப் பரிமித வஸ்துவைப் போலடங்காதென்று சொன்னதேயல்லது ஏகதேசம் மனத்திற்கு விளங்காதென்று சொன்னதல்ல,' என்று நாயக்கர் உத்தரித்தனர்.

மனத்திற்கு அகோசரமென்பது, மனத்திற்கு விஷயப்படாதென்று பொருள்படுமே யல்லது, சிறிது விஷயமாகிப் பெரிது விஷயமாகா தென்று பொருள் படாதென்றும், அவ்வாறு பொருள் கொள்வது லக்ஷண வுபலக்ஷண விதியல்ல வென்றும், ஒரு காலத்தில் ஒரு பொருள் சிறிது விஷயமானல் மற்ருெரு காலத்தில் சிறிது விஷயமாகும், பிறிதொரு காலத்திற் சிறிது விஷயமாகு மென்றும், அவாங் மனோகோசர மென்றதில், மனத்திற்குச் சிறிது விஷயமானபடி வாக்குக்குஞ் சிறிது விஷயமாதல் வேண்டுமென்றும், இங்ஙனம் மன வாக்குகளுக்குச் சிறிது விஷயமாகுமென்று கொண்டபோது கண், காது, மூக்கு, மெய், வாய், கை முதலிய மற்ற இந்திரியங்களுக்கும் விஷயமாகுமென்பது தானே விளங்குவதால் பிரம்ம லக்ஷணத்தோடு விரோதப் படுமென்றும், மனமுதலான அந்தக்கரணங்களும் கண் முதலான இந்திரியங்களுக்கும் நாமரூபக்கிரியைகள் விஷயமாகுமல்லது தத்துவாதீதமாகிய பிரமம் விஷயமாகுமென்பது விபரீத உணர்ச்சி என்றும், மனோலயங் கிடைத்த பின்னர் பிரம்மானுபவங் கிடைக்குமென்றும், மனஞ் சிறிது தோன்றினும் ஆத்ம ஞானம் விளங்காதென்றும், மனம் — அசத்து, சடம், அநித்தியம், துக்கம், அசுத்தம் உடையது; பிரமம் — சத்து, அறிவு, நித்தியம், இன்பம், சுத்தம் உடையது; ஆதலின் மனத்திற்குப் பிரமம் எவ்வகையினும் விஷயமாகாதென்றும், இவ்வாறே வேதமுதலிய கலைகளிலும் ஆப்த வாக்கியங்களிலும் ஆணையிட்டிருப்பதென்றும், பிரம்மம் மனத்திற்கு

விஷயப்படாதென்பது அநுபவத்திற்கும் மற்றஹேதுக்களுக்கும் யூகங்களுக்கும் பொருந்துகின்ற பக்ஷமென்றும் சுவாமிகள் சொல்லினர்.

பின்னர் சில பொழுது நாயக்கர் சும்மா விருந்தினர். அங்கிருந்தவரிற் சிலர் நாயக்கரைப் பார்த்து, 'சும்மா விருக்கப் படாது, உத்தரிக்க வேண்டும்,' என்றூர்கள். நாயக்கர் சற்று நேரஞ் சென்று மீளவும், 'மனத்திஞல் பிரம்மத்தை நினைக்கக் கூடும்,' என்று முன் சொன்னதையே சொல்லினர்.

'தங்களிஷ்டப்படி விதியைக் கடந்த விவகாரமுந் தடைப் படுகின்றது. பிரம்மம், மனத்திற்கு விஷயமாஞல் கண்ணுக்கும் விஷயமாகும் இவைகளுக்கு விஷயமாஞல் மற்ற இந்திரியங்களுக்கும் விஷயமாகும் என்று நான் முன் சொன்னதைத் தாங்கள் சிறிது உய்த்துணர வேண்டும்,' என்று சுவாமிகள் சொல்லினர்.

நாயக்கர் சற்று நேரஞ்சென்று, 'மனத்திற்கு விஷயமாவதெல்லாங் கண்ணுக்கு விஷயமாகுமோ?' என்றூர்.

சுவாமிகள் ஆகுமென்றூர். நாயக்கர், 'மற்ற இந்திரியங்களுக்கு விஷயமாகாமல் மனத்திற்கே விஷயமாகத் தக்கது ஒன்றுமில்லையோ? ஒன்றுமில்லையோ?' என்று பல முறை வியந்து வினவிஞர்.

'மனத்திற்கே விஷயமாகத் தக்கது யாது? அதனைத் தாங்களே வெளிப் படுத்தல் வேண்டும்,' என்று சுவாமிகள் சொல்லினர்.

'ஆனந்தம் மனத்திற்கே விஷயமாவதென்று நாயக்கர் சொல்லினர்.

நேத்திரானந்தம், சிரவணுனந்தம் என்று அறிவுடையோர் பிரயோகிப்பதை யூகிக்க வேண்டுமென்றும், இங்ஙனம் கண் முதலிய

இந்திரியங்களும் மனமுதலிய கரணங்களும் ஆன்மாவுக்கு உபகாரக் கருவிகளாதலால் அவைகள் ஆனந்தமடைந்தன வென்பது உபசரிப்பென்றும், ஆனந்தம் பிரத்தியேக ஆன்மஞான விஷயமென்பது உண்மையென்றும் சுவாமிகள் சொல்லினர்.

அந்தச்சமயத்தில் இவைகளைக் கேட்டுச் சூழ நின்ற திருவயிந்திரபுரம் வைஷ்ணவப் பிராமண பண்டிதர்களும் ஸ்மார்த்த பண்டிதர்களும் அந்தச் சபையினுட் புகுந்திருந்து சுவாமியை நோக்கி, 'மனத்திற்குப் பிரம்மம் புலப்படாதோ?,' என்று வினவினார்கள்.

'பிரமம் மாயாதீதமாதலால், மாயா காரியமாகிய மனத்திற்குப் புலப்படாதென்று சுவாமிகள் சொல்லினர்.

ஆனால், 'பிரமத்தை எப்படி அறியலாம்? என்று பண்டிதர் வினவினார்கள்.

'ஆன்ம ஞானத்தினால் அறியலாம்.' என்று சுவாமிகள் சொல்லினர். பின்னர் சம்மதித்தவர்களாகப் பண்டிதர் சும்மா விருந்தார்கள்.

(சுவாமிகள்) அந்த சபையிற் சிலரை நோக்கி, பிரம்மாநுபவம் விக்கிரக ஆராதனை செய்தாலல்லது வாராதென்றும், விக்கிரகம் என்பது விசேட இடம் என்று பொருள்படு மென்றும், ஆன்மா விருப்பதற்குக் கிரகம் மனிதர் முதலிய சீவ தேகங்களென்றும், பிரம்மப் பிரகாசமிருந்து வெளிப்படுவதற்கு விக்கிரகம் தேவ தேகங்களென்றும், அந்த தேவ தேகங்களாகிய விக்கிரகங்களில் விதிப்படி பக்தியோடு உபாசிக்கில் பிரம்மப் பிரகாசம் எளிதில் வெளிப்பட்டு அனுக்கிரகிக்கு மென்றும், அவ்வாறு விசேட இடமென்று சொல்லப்படுகின்ற விக்கிரகங்களில் பிரம்மப் பிரகாசம் வெளிப்பட்டு அனுக்கிரகித்ததற்கு அடையாளம் சில காலத்திற்குமுன் விக்கிரகாராதனஞ் செய்த

பக்தர்கள் குஷ்டம் குன்மம் முதலான தீராத வியாதிகளைத் தீர்த்தும், இறந்தவர்களை எழுப்பியும், அசாத்தியமான அநேக மகத்துவங்களை நடத்தியும் இருந்ததே போதுமானதென்றும் .... நாமெல்லாம் நமது பக்குவத்திற்குத் தக்கபடி விக்கிரகாராதனை செய்து அதனால் அருளைப் பெற்று, அதனால் அறிவு விளங்கி, அதனால் பிரம்ம சுகத்தை யனுபவிக்கலாமென்றும் சுவாமிகள் சொல்லிக் கொண்டே யெழுந்தனர்.

முற்றறிந்த ஞானியான ராமலிங்க அடிகள் விக்கிரக ஆராதனையை மறுக்கவில்லை - அதன் முக்கியத்துவத்தை எடுத்துச் சொன்னார். ஆத்ம ஞானம் அடைய அது முதற்படி என்றார். முதலில் விக்கிரக வழிபாட்டினால் பக்குவம் பெறாதவர்களுக்குப் பூரண ஞானம் உதிக்காது என்றார். 'விக்கிரகம் கல்தானே! கோவில் கற்கள் தானே!' என்ற பேச்சுக்கள் அறைகுறை ஓதுதலாலும், தன்னக நிறைவின்மையாலும் எழுபவை. அடிகள், தம் உபதேசம் ஒன்றில், சந்தேகத்திற்கிடமின்றி பின்வருமாறு அருளியுள்ளார்:

தியானஞ் செய்ய வேண்டுமெனல், ஏதாவது ஓர் உருவத்தைத் தியானிக்க வேண்டும். நிஷ்களமாயிருக்கப்படாது. உருவமாக இருக்க வேண்டும். அருவமாகத் தியானிக்கப் படாது. பின், உருவங் கரைந்து அருவமாகும். துவைதமாக இருந்தால், அத்துவைத்தம் தானே ஆகும். எப்படி எனில் — பார்க்கும் தான் கெடுவது அத்வைதம். பார்க்கப்படும் பொருளும் கெடுவது அதீதம். சத்தியம்.

—(திருவருட்பா, இரண்டாம் பாகம், சமரச சுத்த சன்மார்க்கக் குறிப்புகள் பகுதி – பக்கம் 98)

<u>குறிப்பு</u>: இது வள்ளல் பெருமானின் சுய அநுபவ உபதேசம். இதற்கு உபநிடதப் பிரமாணம் இருக்கிறது. முண்டகோபநிஷத்தில் மூன்றும் முண்டகம் இரண்டாம் கண்டத்தில் மூன்றும் சுலோகம் பின்வருமாறு.

நாயமாத்மா பலஹீனேன லப்யோ

நச பிரமதாத்தபஸோ வாபி அலிங்காத்

ஏதைருபாயை: யததே யஸ்து வித்வான்

தஸ்யைஷ ஆத்மா விசதே பிரம்மதாம

இந்த ஆத்மா (மனக்கட்டுப்பாடு இல்லாத) பலஹீனத்தினுலோ, நாட்டமின்மையினுலோ, தெய்வக் குறி (லிங்கம்) இல்லாமற் செய்யும் தபஸினுலே அடைவதற்கில்லே. இந்த அனேய உபாயங்களேயும் எந்த அறிஞன் கையாண்டு முயலுகிருனே, அவனுடைய ஆத்மா பிரம்மனே அடைகிறது.

ராமலிங்க அடிகளின் அருள் மொழியுடன் சேர்த்து ஏன் இந்த உபநிடதப் பிரமாணம் கொடுக்கப் படுகின்றது எனில்;

விக்கிரகசாதனத்தின் அவசியத்தை இந்த சுலோகம் கூறுகிறது என்ருலும், இந்தப் பொருள் படும் வகையில் எவரும் இச் சுலோகத்தை எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லே. இந்த விஷய சம்பந்தமாய் முக்கியமான பதம், 'அலிங்காத்.' இதை ஆதி சங்கரர், 'சந்நியாச ஆசிரமத்தின் உரிய குறி இல்லாமல்' என்று பொருள் படுத்தி யிருக்கிருர். 'அலிங்காத்' என்னும் பதத்திற்கு 'லிங்கமில்லாமல்', அதாவது 'உருவம் அல்லது தெய்வ அடையாளம் இல்லாமல்' என்றுபொருள் எளிதே சிரமமில்லாமல் கிடைக்கிறது. சுலோகத்தில் இல்லாத ஒரு பதத்துடன் இதைச் சேர்த்து அர்த்தம் சொல்லுவது, ஒரு சுற்று வழியாகத்தான் தோன்றுகிறது. மேலும் ஆதிசங்கரர், தாம் கொண்ட பொருளே வரவழைப்பதற்கென, வேருெரு பதத்திற்கும் ஒரு புதுமை வியாக்கியானம் செய்கிருர். அதாவது 'தபஸ்' எனும் பதத்திற்கு. இதற்கு 'அறிவு' என்னும் பொருளேக் கொடுக்கிருர். 'லிங்கம்' என்னும் பதத்துடன் ஓர் இல்லாத பதம், 'சந்நியாசம்' என்பதைச் சேர்த்து, அதன் பொருளே, 'சன்னியாசத்தின் குறி' என்ருக்கி, அதற்கு மேல்

தபஸ்' என்னும் பதத்திற்கு 'அறிவு,' என்று அப்பதத்திற்கு இல்லாத பொருளைக் கொடுத்து, இரண்டு புதுமைப் பொருள்களைச் சேர்த்து, வாக்கியத்திற்கு 'சந்நியாசம் இல்லாமல் வெறும் அறிவினால் ஆத்மாவை அறிய முடியாது.' என்ற பொருள் கொடுக்கிறார். சுவாமி சர்வானந்தாவும், டி. எம். பி. மகாதேவனும், அதே முறையில், சில வேறுபாடுகளுடன், 'அலிங்காத்' என்னும் பதத்திற்கு, 'முறையில்லாத தபஸினால்,' 'இலக்கு இல்லாத தபஸினால்' என்னும் பொருள் கொடுத்து, 'இவைகளால் ஆத்மா அடையப்படா' என்று சுலோகத்திற்கு விளக்கம் தருகின்றார். இந்த அதீதமான அறிவைக் களைந்துவிட்டு நோக்கினால், லிங்கம், அதாவது சின்னம் அல்லது வடிவம், அதாவது விக்கிரகம் இல்லாத தபஸினால் அல்லது வழிபாட்டினால் ஆத்மா அடையப்படாது என்ற பொருள் கிடைக்கின்றது. இது ராமலிங்க அடிகளின் உபதேசத்தை ஒத்திருக்கிறது. 'லிங்கம்' என்னும் பதத்திற்கு தெய்வச் சின்னம் அல்லது விக்கிரகம் என்ற பொருள் உண்டு.

# அத்தியாயம் 15

## வளரும் நெறி

கருங்குழி வாசத்தின் இறுதியில் சமரசவேத சன்மார்க்க சங்கத்தை நிறுவிய பின், அடிகள் தாம் செய்வதற் கென்றே பிறந்த காரியத்தைச் செயல் படுத்தும் வேளை வந்துவிட்டதாக உணர்ந்தார் போலும். அவர் பேச்சிலும் மூச்சிலும் ஒரு தெய்வசக்தி உறைந்து நின்றது, ஓர் அருட் ஜோதி பறந்தது. அவர் முழங்குகிறார்:

அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்
திருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடைவித் திடஅவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்
திடுதற் கென்றே எனை இந்த
உலகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன் அருளைப் பெற்றேனே.

உய்யும் முறையை அவர் மக்களுக்குக் காட்டிய முறையில் ஓர் அழுத்தத்தையும் நிச்சயத்தையும் காண்கிறோம்:

கண்டதெலா மநித்தியமே கேட்டதெலாம் பழுதே
கற்றதெலாம் பொய்யேநீர் களித்ததெலாம் வீணே
உண்டதெலா மலமேயுட் கொண்டதெலாங் குறையே
உலகியலீ ரிதுவரையு முண்மையறிந் திலீரே

விண்டதனு லென்னினிநீர் சமரசசன் மார்க்க
மெய்ந் நெறியைக் கடைபிடித்து மெய்ப்
பொருணன் குணத்தே
எண்டகுசிற் றம்பலத்தே யெந்தையரு ளடைமின்
இறவாத வரம் பெறலா மின்பமுற லாமே.

இந்த நிச்சயமும் அழுத்தமும் தாம் இறைவனிடமிருந்தே சிக்ஷை பெற்றதினுல் என்று கூறுகிருர்:

நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்சொல்
வார்த்தையன்றி
நானுரைக்கும் வார்த்தையன்று நாட்டீர்நான்—
ஏனுரைப்பேன்
நானு ரெனக்கெனவோர் ஞானவுணர் வேதுசிவம்
ஊனுடி நில்லா வுழி
நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்றன்
வார்த்தை
நம்புமினோ நமரங்காள் நற்றருண மிதுவே
வானுரைத்த மணிமன்றில் நடம்புரியெம் பெருமான்
வரவெதிர்கொண் டவனருளால் வரங்களெலாம்
பெறவே
தேனுரைக்கு முளமினிக்க வெழுகின்றே னீவிர்
தெரிந்தடைந்தென் னுடனெழுமின் சித்திபெற
லாகும்
ஏனுரைத்தே னிரக்கத்தா லெடுத்துரைத்தேன்
கண்டீர்
யானடையுஞ்சுகத்தின்நீர் தானடைதல்குறித்தே.

சங்கத்தை நிறுவிய பிறகு அடிகள் இரண்டு ஆண்டுகள் கருங்குழியில் உறைந்தனர். இக்காலத்தில் அவர்

அவ்வப்போது அயலிடங்களுக்குச் சென்று தங்குவார். ஒரு சமயம் அவர் கடலூருக்குச் சென்ற பொழுது, தம் அன்பர்களிடம், போவோர் வருவோர்களுக்குப் பசி தீர்க்க ஒரு தருமச்சாலை அமைக்க வேண்டும் என்று அறிவித்தனர். 'சீவகாருண்ய ஒழுக்க' நூலில் அடிகள் கூறியுள்ளார்:

> பசியினால் வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தாராயினும் எந்தச் சமயத்தாராயினும் எந்தச் சாதியாராயினும் எந்தச் செய்கையாராயினும் அவர்கள் தேசஒழுக்கம் சமயஒழுக்கம் சாதியொழுக்கம் செய்கையொழுக்கம் முதலானவைகளைப் பேதித்து விசாரியாமல் எல்லாச் சீவர்களிடத்திலும் கடவுள் விளக்கம் பொதுவாய் விளங்குவதை அறிந்து, பொதுவாகப் பார்த்து அவரவர் ஒழுக்கத்துக்குத் தக்கபடி அவர்கள் பசியை நிவர்த்திப்பதே ஜீவகாருண்யம்.

அடிகளின் கட்டளைப்படி தருமச் சாலையும் கட்டப்படலாயிற்று. அடிகளே அதற்குரிய இடத்தைத் தேர்ந்தெடுத்தார். சிதம்பர தலத்திற்குச் சுமார் முப்பது கிலோமீட்டர்கள் தூரத்தில், கடலூரைச் சார்ந்த, வடலூர் என்றும் பார்வதிபுரம் என்றும் வழங்கப்படும் ஊருக்கு வடப்புறத்தில், சென்னை–கும்பகோணம் நெடுஞ்சாலையும் மஞ்சக்குப்பம்–விருத்தாசலம் நெடுஞ்சாலையும் கூடுமிடத்திலுள்ள பெருவெளி, தர்மச் சாலை அமைக்கத்தக்க இடம் என்று முடிவு செய்தனர். இதை ஆணை என மேற் கொண்டு, அவ்விடத்து நிலங்களுக்குரியவர்கள் எண்பது காணி (அல்லது நூற்றியெட்டு ஏக்கர்கள்) நிலத்தை அவருக்கு பட்டா செய்து கொடுத்தனர். இந்தப் பத்திரம் நாற்பது பேர்களின் கையொப்பமோ கீறலோ கொண்டு, 2 பிப்ரவரி 1867 என்ற தேதி குறித்துள்ளது.

தருமச் சாலையின் திறப்பு விழா 23–5–1867–ல் நடை பெற்றது. அதற்கு முன்னரே தற்காலிகமாய் விழல் வேய்ந்த மண் கட்டிடம் எழுப்பப் பட்டது. அதில் உணவு வழங்குதல் தொடங்க, அதே சமயம் நிலையான செங்கற் கட்டிடங்களுக்கு

அஸ்திவாரம் இடுதலும், கிணறு குளம் கேணி முதலிய நீர்நிலை யெடுப்புகளும் துவங்கின. ஆயிரம் பத்திரிகைகள் சங்கத்தின் பெயரில் அச்சிட்டு வழங்கப்பட்டன. துறவிகளுக்கு அடிகளின் பெயர் கொண்டு தனி அழைப்பிதழ்கள் அனுப்பப் பட்டிருந்தன. தொடங்கிய தினம் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அன்னம் அளிக்கப் பட்டது. இன்றும், சாதி சமய வேறுபாடுகள் இல்லாமல் சாலைக்கு வருபவர்களுக்கு அன்னதானம் நடந்து வருகிறது.

தொடக்க விழாவில் சிதம்பரம் வேங்கட சுப்பு தீக்ஷிதர் அவர்கள் அடிகளின் ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் முதற் பாகத்தை வாசித்தனர். அடிகளின் நெறிக்கு முதற்படி ஜீவகாருண்யம், 'முக்திக்கு முதற்படி ஜீவகாருண்யம்' என்றார் அவர். ஜீவகாருண்யம் இரண்டு அம்சங்கள் கொண்டது, என்றார் அவர். ஒன்று புலால் மறுத்தல், இரண்டாவது பசித்த வயிறுகளின் பசி தீர்த்தல். இதை விளக்கும் அடிகளின் 'ஜீவகாருண்ய ஒழுக்கம்' தீயின் ஜ்வாலைகள்போல் குமுறும் சொற்களில் எழுகிறது.

தருமச் சாலைக்கு அடிகள் சமரச வேத தருமச்சாலை என்று பெயரிட்டனர். அன்னதானம் செய்யும் இடத்திற்குப் பொது வழக்கிலுள்ள 'சத்திரம்' என்னும் சொல்லை, இழிவு காட்டும் சொல் என்று நீக்கி, 'சாலை' எனும் பெயரை அமைத்தார். பிற்காலத்தில், சங்கம் உட்பட அனைய நிறுவனங்களின் பெயர்களையும் மாற்றிய முறையில், சாலையின் பெயரையும் 'சமரச சன்மார்க்க சத்திய தருமசாலை' என்று மாற்றினர்.

தருமச் சாலை நிறுவிய ஆண்டிலே அடிகள் சன்மார்க்க நெறியை போதிக்க, 'சன்மார்க்க போதினி' என்னும் பள்ளிக்கூடத்தை நிறுவினர். இதில் இளஞ்சிறுர் முதல் முதியோர்கள் வரை அனைவருக்கும் இடம் உண்டு. மும்மொழிகள்—தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் — கற்பிக்கப் பட்டன் இவ்விரு விஷயங்களிலும் அடிகளின் தீர்க்க தரிசனத்தைக் காணலாம். 'உபய கலாநிதிப் பெரும் புலவர்' என்று சிறப்புப் பெயர் பெற்ற தொழுவூர் வேலாயுத முதலியார்

இப்பள்ளியின் பொறுப்பேற்றிருந்தார். ஆனால் பள்ளி அதிக நாள் ஓடவில்லை.

அதே ஆண்டில் அடிகள் சன்மார்க்கக் கொள்கைகளை எடுத்துச் சொல்ல 'சன்மார்க்க விவேக விருத்தி' என்ற பத்திரிக்கையைத் தொடங்கத் திட்டமிட்டார். இதற்குப் பொருள் திரட்டுவதற்கும் விளம்பரம் செய்வதற்கும் ஓர் அறிக்கை விட்டார். மாதந்தோறும் பொருளுதவி செய்வதாக நாற்பத்தி ஒன்பது ஆதரவாளர்கள் கையொப்பமிட்டனர். இவர்களில் ஒருவர் முஸ்லிம் – காதர் சாய்பு என்ற பெயர் உடையவர். திட்டமிடப் பட்டும், பத்திரிக்கை வெளிவராமற் போயிற்று. இதைப் பின்னர் 1969–ம் ஆண்டிலிருந்து திரு. ஊரன் அடிகள் தொடங்கி நடத்தினர்.

# அத்தியாயம் 16

## வடலூரும் சத்தியஞான சபையும்

தருமச் சாலையை நிறுவிய காலத்தில் (1867—ல்) அடிகள் கழுங்குழியை விட்டு வடலூரில் வசிக்கத் தொடங்கினர். வடலூரிலிருந்து பார்ப்பவர்களுக்கு சிதம்ரத்தின் ஸ்தூல லிங்கமான நான்கு கோபுரங்களும் தென்படும். இக் காரணத்தினுல் அவர் வடலூரைத் தர்ம சாலைக்கும் தமக்கும் இடமாக்கிக் கொண்டார் போலும். 1870—ம் ஆண்டுவரை தர்மசாலை அவருடைய உறைவிடமாயிற்று; சன்மார்க்க சங்கத்தின் பணிகளுக்கும் அகமாயிற்று; அறச்சாலையாயிற்று. எங்கும்போல், இங்கும் அடிகளைக் காணவும், அவருடைய பேச்சைக் கேட்கவும், அருளைப் பெறவும் மக்கள் திரண்டனர்.

சாலையை அடிகளின் தொண்டர் மு.அப்பாசாமி செட்டியார் நடத்தி வந்தார். அன்பர்கள் சண்முகம் பிள்ளை, நமச்சிவாயம்பிள்ளை முதலியவர்களும் சாலையிலேயே தங்கிப் பணியாற்றினர். ஒருநாள் சாலையில் அரிசியில்லாமற் போனதை சண்முகம் பிள்ளை அடிகளிடம் தெரிவித்தார். 'வேண்டியவை நாளை வரும்,' என்று அடிகள் மொழிந்தனர். அங்ஙனமே அடுத்த நாள் மூன்று வண்டிகள், அரிசியும் பிற உணவுப் பொருட்களும், சாலைக்கு வந்து சேர்ந்தன.

இந் நாட்களில் நிலவிய அவருடைய மனநிலையை அவருடைய சில பாடல்கள் அழகாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இவை, அடிகள் இறைவனின் தரிசனத்தையும் அருளையும் பெற்றதைத் தெரிவிக்கின்றன:

உடுத்ததுகில் அவிழ்ந்துவிரித் தொருதரையில்
தனித்தே

உன்னுதும் உன்னிஉளத் துறுகலக்கத் தோடே

படுத்தயர்ந்த சிறியேன்றன் அருகணைந்து மகனே
பயமுனக்கென் என்றெனைப் பரிந்துதிருக் கரத்தால்
அடுத்தணைத்துக் கொண்டெடுத்துப் போயப் பிறிதோர் இடத்தே
அமர்த்திநகைத் தருளியஎன் ஆண்டவனே அரசே
தொடுத்தணிஎன் மொழிமாலை அணிந்து கொண்டென உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

மற்றொரு பாடலில் பல பிறப்புகள் தவத்தால் சேகரிக்கக் கூடிய பெரும்பயனை ஒரு நாளிலேயே தமக்கு இறைவன் அளித்து விட்டதாகக் கூறுகிறார்.

காலையிலே என்றனக்கே கிடைத்தபெரும் பொருளே
களிப்பேஎன் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே
மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்
மேவுகின்ற பெரும்பயனும் விளைவைஎலாம் தருமச்
சாலையிலே ஒருபகலில் தந்ததனிப் பதியே
சமரச சன்மார்க்கசங்கத் தலைஅமர்ந்த நிதியே
மாலையிலே சிறந்தமொழி மாலைஅணிந் தாடும்
மாநடத்தென் அரசேஎன் மாலையும்ஏற் றருளே.

இதே முறையில் வேறு பாடல்களிலும் இறைவனைக் கண்டு கொண்ட களிப்பைத் தெரிவிக்கிறார்.

தருமச் சாலையில் கூட்டம் அதிகரித்துக் கொண்டு வந்தது. ஆகவே அடிகள், ஆத்ம சாதனத்திற்கும்

யோகநிஷ்டைக்கும் அமைதியும் தனிமையும் நாடி, அடிக்கடி வடலூருக்கு மூன்று கிலோமீட்டர்களுக்கு அப்பால் இருந்த மேட்டுக் குப்பம் என்ற இடத்திற்குச் செல்லுவார். அங்குள்ளோர் அவரை அங்கேயே தங்கி அருளும்படியாக வேண்ட, அவரும் அதற்குச் சம்மதித்தார்.

1870 மே மாதத்தில், வடலூரில் மூன்றாண்டு வாசத்திற்குப்பின், அவர் மேட்டுக் குப்பத்திற்குச் சென்று வசிக்கலானார். அங்கு அவ்வப்போது வைணவ ஆசாரியர்கள் வருங்காலத்தில் அவர்களுக்குத் தங்குவதற்கென அமைக்கப் பட்டிருந்த இடத்தைத் திருமாளிகை என வழங்குவர். இம்மாளிகை பலகாலம் தங்குபவர்களின்றி வெறுமனே கிடந்தது. அதில் இருந்து வரும்படி அடிகளை ஊர்மக்கள் கேட்டுக் கொண்டனர். அடிகளும் அதற்கிணங்கி அங்கு வசிக்கத் தொடங்கினார். அதற்கு 'சித்தி வளாகம்' என்று பெயரிட்டார். ஆகவே அது சித்தி வளாகத் திருமாளிகை என்று வழங்கலாயிற்று. இந்த மாளிகையில் அடிகள் தாம் சித்தி பெற்ற 1874-ம் ஆண்டு வரை தங்கியிருந்தார். நாள்தோறும் மாலையில் அவர் அங்கு திரண்ட மக்களுக்கு நல்மொழி கூறியும் சன்மார்க்க நெறியை உபதேசித்துக் கொண்டும் இருந்தார்.

அருட்பெருஞ் ஜோதிக்கென சன்மார்க்க சங்கம் நிறுவிய அடிகள் சங்கத்திற்கென ஒரு கோவிலையும் காண விரும்பினார்:

தங்கமே அனையார் கூடியஞான
சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்
சார்ந்திருக் கோயில்கண் டிடவும்
துங்கமே பெறுஞ்சற் சங்கம்நீ டூழி
துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
ஆடவும் இச்சைகாண் எந்தாய்.

இங்ஙனம் எழுந்த கோவிலே சத்தியஞான சபை.

இதற்கென அடிகள் வடலூரில் தருமச் சாலையின் பக்கத்தில் நாற்பது காணி (ஐம்பது ஏக்கர்) பரப்புள்ள ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தார். இவ்விடத்திற்கு அவர் இட்ட 'உத்தரஞான சிதம்பரம்' எனும் பெயர் பிறகு வடலூருக்கே பெயராக அமைந்துவிட்டது. கோவிலைக் கட்ட வேண்டிய முறையை வரைந்து, ஞான சபையை எண்கோணமாகத் தாமரை மலரெனக் கட்டவேண்டும் என்ற தம் கருத்தைத் தெரியப்படுத்தினர். 1871–ம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஞானசபையைக் கட்டும் பணி துவங்கியது. அடிகள் மேட்டுக்குப்பத்தில் இருந்தவாறு காரியத்தை நடத்தி வைத்தார், அடிக்கடி வடலூர் சென்று தருமச் சாலையையும் ஞானசபையையும் பார்வையிட்டு வருவார். அத்துடன், சாலையிலுள்ளார்க்கு வேண்டிய காலங்களில் ஒழுக்கக் கட்டளைகள் இட்டுவந்தார்.

'கோவில்' எனும் சொல்லுக்குப் பதிலாக, சமயச் சார்புகளைக் கடந்ததாக இருக்க வேண்டுமென்று, 'சபை' என்ற பெயர் வழங்கி, சன்மார்க்க சங்கக் கோவிலுக்கு சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான சபை' (அல்லது சுருக்கமாக, 'சத்திய ஞான சபை') என்ற பெயரை வழங்கினர். அதே சிறப்பு முறையில் முன்பு சன்மார்க்க சங்கத்திற்கு 'மடம்' என்ற பெயர் வைக்காமல், 'சங்கம்' என்ற பெயர் இட்டார்; தருமச்சாலைக்கு 'சத்திரம்' என்ற பெயர் வைக்காமல், சாலை என்ற பெயர் வைத்தார். இச்சிறு விஷயங்களில் கூட நாம் அடிகளின் பண்பையும் கொள்கைச்சிறப்பையும் காணலாம்.

அடிகள் தம் அகத்தே கண்ட அருட் பெருஞ்ஜோதியை அனைவருக்கும் வெளிப்பிம்பமாய்க் காட்டியருள சத்தியஞான சபையைக் கட்டினர். சிதம்பரத்தில் உள்ள பொற் சபையும் சிற் சபையும் அமைத்து, அவற்றுடன் ஒரு ஞான சபையையும் அமைத்தார். இது எண்கோணவடிவானது; இதில் பன்னிருகால் மண்டபம் ஒன்றும், அம்மண்டபத்திற்குள் நாற்கால் மண்டபம் ஒன்றும் அடங்கியிருந்தன. உள் மண்டபத்தின் நடுவே அருட் பெருஞ்ஜோதி ஆண்டவர்

பிரதிஷ்டை செய்யப்பட்டார். தீபத்துடன், சுமார் ஐந்தடி உயரமுள்ள கண்ணுடி, சித்தி வளாகத்தில் ஒரு மண்டலம் (நாற்பத்தி எட்டு நாட்கள்) வழிபாடான பிறகு பிரதிஷ்டை செய்யப் பட்டது. நடுச் சோதியை மறைத்தவாறு, வெவ்வேறு நிறங்களில் ஏழுதிரைகள் தொங்கின. ஞான சபையை இயற்கை விளக்கம் என்ருர் அடிகள். இந்தச்சபை, நம் கண்டத்திற்கு மேலும், ஜோதி புருவமத்தியிலும் இருப்பதாகக் கூறுவர். ஏழு மாயைத்திரைகளே அருட் பெருஞ்ஜோதி அகவலில் விளக்குகிருர்:

கரவின்மா மாயைக் கரும்பெருந் திரையால்

அரசது மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி

பேருறு நீலப் பெருந்திரை அதனுல்

ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி

பச்சைத் திரையால் பரவொளி அதனை

அச்சுற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

செம்மைத் திரையால் சித்துறு வெளியை

அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

பொன்மைத் திரையால் பொருளுறு வெளியை

அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

வெண்மைத் திரையால் மெய்ப்பதி வெளியை

அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

கலப்புத் திரையால் கருதனு பவங்களை

அலப்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

வடலூர் ஞானசபையின் தத்துவத்தைத் திரு சி. முத்துக் குமாரசாமி* பின் வருமாறு விளக்குகிருர்:

* சி முத்துக்குமாரசாமி : 'இறப்பில்லா இன்ப வாழ்வு'. பக்கங்கள் 75-79 (பிரசுரம் : வி. ஜி. இராமானுஜம் & சன்ஸ், மேல சன்னதி, சிதம்பரம், 1961)

1. அன்பு என்ற சங்கிலியால் அகப்படுவது அருட் பெருஞ் ஜோதி என்பதை உணர்த்த சபையைச் சுற்றி சங்கிலி ஒன்றை அமைத்தார்கள் (வள்ளலார்).

'பக்தி வலையில் படுவோன் காண்க.'

'அன்பெனும் வலைகுட் படுபரம் பொருளே.'

2. அதை அடுத்து இடை இடையே அறிவு வடிவான, வேற்படையின் குறியுள்ள இரும்புக் கம்பிகளுடன் கூடிய 52 கட்டைகளும், ஓம் என்ற மூல மந்திரத்துடன் கூடிய அகராதி, க்ஷகாராந்தமாகவுள்ள மாத்ருகா மந்திரங்களை உணர்த்துகின்றன.

3. முகப்பில் உள்ள மூன்று வாயில்களும் அருட்பெருஞ் ஜோதியையடைவதற்குச் சாதனங்களாகவுள்ள கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்ற மூன்று யோகங்களையும், அதை அடுத்துள்ள இரு சாளரங்கள் பாசஞானம், பசுஞானம் என்ற இரண்டு ஞானங்களையும் உணர்த்துகின்றன.

4. அகவல் மண்டபத்தின் இருபக்கங்களில் கிழக்கும் மேற்கும் உள்ள வாயில்கள் பரஞானத்தையும் அபரஞானத்தையும் அறிவிக்கின்றன.

5. அகவல் மண்டபத்திலுள்ள நான்கு சாரளங்களும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடுதல் என்ற நான்கின் வழியாக உட்பொருளை உணரவேண்டும் என்று உணர்த்துகின்றன.

6. அதனை அடுத்துள்ள திருமண்டத்தில் மேற்புறம் விளங்குவது சிற்சபை (வெள்ளியம்பலம்), கீழ்ப்புறத்தில் விளங்குவது பொற்சபை (பொன்னம்பலம்), வடபுறம், தென் முகமாகத் திகழ்வது ஞான சபை (அறிவு மன்றம்) என்க.

7. ஞான சபையைச் சூழ்ந்துள்ள நீராழிப்பத்தி என்றபிராகாரத்தில் உள்ள இருபத்திரண்டு வளைவுகளும், அதனையடுத்து இருபுறத்தும் உள்ள பக்க வழிகள் இரண்டும் சேர்ந்த இருபத்து நான்கையும் ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு என அறிக.

பூதங்கள் ஐந்து: — மண், நீர், தீ, காற்று, வெளி.

தன்மாத்திரைகள் ஐந்து: — சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

ஞானேந்திரியங்கள் ஐந்து: — மெய், வாய், கண், நாசி, செவி.

கன்மேந்திரியங்கள் ஐந்து: — வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம்.

அந்தக்கரணங்கள் மூன்று: — மனம், புத்தி, அகங்காரம்.

குணம்: — ஒன்று.

ஆக ஆன்ம தத்துவங்கள் 24.

8. நீராழிப் பத்தியில் உள்ளடங்கியுள்ள ஏழுவாயில்களும், வித்யா தத்துவங்கள் ஏழைக்குறிக்கின்றன.

வித்யா தத்துவங்கள் — காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மூலப்பகுதி.

9. ஞானசபையின் தென்புறத்திலுள்ள கண்ணாடிக் கதவுகளுடன் கூடிய மூன்று வாயில்கள், ஞாயிறு, திங்கள், நெருப்பு என்ற மூன்று விழிகளை விளக்குகின்றன.

10. அதன்படிகள் ஐந்தும் நமசிவாய என்ற ஐந்தெழுத்தென உணர்க.

11. பிரகாரத்துள்ள சாளரம் பதினான்கும் வித்தைகள்பதினான்கு என்க. அல்லது சாத்திரம் பதினான்கு என்க.

12. ஞான சபையின் இடையில் உள்ள பன்னிரண்டு தூண்களும் பன்னிரண்டு மெய்கண்ட சூத்திரங்களாகும்.

13. ஞான சபையின் நடுவேயுள்ள அதிட்டான பீடத்தின் தென் திசையிலுள்ள ஐந்து படிகளும் சிவ தத்துவங்கள் ஐந்தையும் உணர்த்தும். அவையாவன :— சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை. மேற்கு, கிழக்கு, வடக்கு, கீழ் நோக்கியுள்ள திருக்களிற்றுப் படிகளாகிய ஐந்து, ஐந்து வீதமுள்ள படிகள், சூக்கும பஞ்சாக்கரம் காரண பஞ்சாக்கரம், மகா காரண பஞ்சாக்கரம், முக்தி பஞ்சாக்கரம் என்க.

14. அதிட்டான பீடத்திற்கு இடையேயுள்ள நாற்கால் மண்டபம் ஜோதி ஞான பீடமாகும்.

15. ஜோதி ஞான பீடத்தின் நான்கு படிகளும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களாகும். அதன் வழியேறி அருட்பெருஞ்ஜோதியை யடைதல்வேண்டும்.

16. ஜோதி பீடத்திலுள்ள நான்கு தூண்களும் ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்ற ஞான பதங்களாகும்.

17. அதன் வடதிசையில் உள்ள ஓங்கார வளைவுகளுக்கு இடையில் ஞான வெளியில் அருட்பெருஞ்ஜோதி விளங்குகிறது.

18. அதனை முறையே கருப்பு, நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள், வெண்மை என்று மறைந்துள்ள ஆறு திரைகளும், ஆணவம், கன்மம், அசுத்தமாயை, மிச்ரமாயை, சுத்த மாயை, திரோதம் என்ற ஆறுமாகும்.

மேற்கூறிய ஆறு மறைப்புகளும் விலகியவுடன் பிரணவ வட்டத்துள் ஞான பீடத்தின் மீது விளங்கும் தனிப் பெருங்கருணையுடன் கூடிய அருட்பெருஞ் ஜோதி காட்சியளிக்கிறது.

அன்புத் தளையாலும், அறிவு மயமாகிய பிரணவத்துடன் கூடிய ஐம்பத்திரண்டு அக்ஷரங்களாகிய மாத்ருகா மந்திரங்களாலும் சூழப்பட்டு, கர்மயோகம், பக்தியோகம், ஞான யோகங்களின் வழியாகவும், பரஞான பசுஞானங்களை யறிந்து, உட்சென்று, கேட்டு, சிந்தித்து, தெளிந்து, நிட்டைகூடி, சிற்சபை, பொற்சபை, இரண்டையும் தெரிசித்து, ஞான சபையை யடைவதற்குத் தகுதி பெற்று, சோம, சூரிய, அக்கினி என்ற மூன்று கண்களும் திறக்கப் பெற்று, தூல பஞ்சாக்கர வழியேறி, ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கையும், வித்யா தத்துவங்கள் ஏழையும், சிவ தத்துவங்கள் ஐந்தையும், ஆக, ஆறுறு முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து ('ஆறுறையு நீத்ததன் நிலையைப் பேறு அடியேன் பெறுமாறுளதோ' என்றன் படி), பதினன்கு வித்தைகளுக்கு இடையிலுள்ள பன்னிரு மெய்கண்ட சூத்திரங்களையுணர்ந்து, அதன் பயனுகிய சூக்கும, காரண, மகாகாரண, முக்தி பஞ்சாக்கரங்களை யுணர்ந்து, சரியை, கிரியை, யோக, ஞான மாகிய படிகளின் மீது ஏறி, ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் கைவரப் பெற்று, ஆணவம், கன்மம், அசுத்தமாயை, மிச்ரமாயை, சுத்தமாயை, திரோதனம் என்ற ஆறு மறைப்புகளையும் அகற்றி, பிரணவ வீட்டில், அருள்ஞான பீடத்தின் மீது, தனிப்பெருங்கருணையுடன் கூடிய அருட்பெருஞ்சோதியைத் தரிசிக்க வேண்டும்.

எட்டுத்திசையும் பதினறு கோணமும் எங்கும்
ஒன்ருய்

முட்டித்ததும்பி முளைத்தோங்கு சோதியை

(பட்டினத்தடிகள்)
[திரு சி. முத்துகுமாரசாமியின்
நூலிலிருந்து.]

சத்திய ஞான சபை பிரஜோற்பத்தி தை 13, வியாழக் கிழமை (25 ஜனவரி 1872) பூச நாளில் திறக்கப்பட்டது. தொடக்கவிழாவிற்கு அடிகள் வரவில்லை. எப்பொழுதும் போல் மேட்டுக்குப்பத்தில்தான் இருந்தார். ஆனல் விழாவையொட்டி ஒரு விளம்பரம் வெளியிட்டார்கள். அதில் அவருடைய ஞானசித்தியும் அருளும் ஒலிக்கின்றன.

உலகத்தினிடத்தே பெறுவதற்கு மிகவும் அருமையாகிய மனித தேகத்தைப் பெற்ற நண்பர்களே!

அறிவு வந்த காலமுதல் அறிந்து அறியாத அற்புத அறிவுகளையும், அடைந்து அறியாத அற்புத குணங்களையும், கேட்டு அறியாத அற்புதக் கேள்விகளையும், செய்து அறியாத அற்புதச் செயல்களையும், கண்டு அறியாத அற்புதக் காட்சிகளையும், அனுபவித்தறியாத அற்புத அனுபவங்களையும், இது தருணந் தொடங்கிக் கிடைக்கப் பெறுகின்றேன் என்றுணர்கின்ற ஓர் சத்தியவுணர்ச்சியாற் பெருங்களிப்புடையேனுகி இருக்கின்றேன்.

நீவிர்களும் அவ்வாறு பெற்றுப் பெருங்களிப்பு அடைதல் வேண்டும் என்று எனக்குள்ளே நின்று நிறைந்து எழுந்து வெளிப்பட்ட என்து சுத்தசன்மார்க்க லக்ஷியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமைப் பேராசை பற்றியே இதனைத் தெரிவிக்கின்றேன்.

ஞானசபையில் வழிபாடு அடிகளின் ஞானமுறையிலே அமைந்திருந்தது. சபை எம்மதத்தினருக்கும் எவ்வர்க்கத் தினருக்கும், எத்தேசத்தினருக்கும் புறம்பு இல்லை. ஆனால் ஆன்ம நேயத்தை ஒட்டிய ஒரு நீக்கல் இருந்தது. புலைப்பசியும் உயிர்க் கொலையுமுடைய புறவினத்தார் சபைக்கு வெளியே நின்று வழிபட வேண்டும். மற்ற இரு சபைகளிலும் அவர்கள் புகலாகாது. சபையை சுத்தப் படுத்துவதற்கும், அகண்டத்திற்குத் திரி முதலானவை இடுவதற்கும், புலை கொலை நீத்தவராயும் மூவாசைகளிலும் பற்றில்லாதவரையும் உள்ளவர் ஒருவர் சபையில் புகலாம். வழிபாட்டிற்கு மத்தளம், தேங்காய், பழம், தீப தூப திருநீறுகள் முதலியநைவேத்திய ஆராதனை பிரசாதங்கள் ஒன்றும் கிடையா. இதே முறையில் சபையில் விளக்கேற்றும் விஷயத்தில் அடிகள் இட்ட கட்டளை அவருடைய தனி நோக்கைக் காண்பிக்கிறது. குத்து விளக்குகள், பித்தளை விளக்குகள், குளோப்பு விளக்குகள் வேண்டாம். உட்புற வாயில்களுக்குச் சமீபங்களில் தகரக் கண்ணாடி விளக்குகளே வைக்கவேண்டும் என்றார்.

சத்திய ஞான சபைக்கு முதல் பூசகராய் இருந்தவர் சபாபதி சிவாசாரியர் அவர்கள். அவர் சபைக்குக் கும்பாபிஷேகம் செய்து பணி புரிந்தார். தமக்குக் கிடைத்த திருவருட்பா ஏடுகளைப் பத்திரப் படுத்தி வைத்தார். அடிகளின் அருட்பெருஞ்ஜோதி அகவலை வெளியிட்டார். ஆயினும் அவர், இந்நற் செயல்களுக்கு மாறாகப் பிறகு அடிகளின் உத்தரவை மீறி, வழிபாட்டில் சடங்குகள் புகுத்தினர், சபையில் ஸ்படிக லிங்கம் ஸ்தாபித்தார்.

ஞானசபை காட்டும் சுத்த சன்மாரக்கத்தின் சாரம் அடிகளின் சுத்த சன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பத்தில், கீழே காணும் சில வாக்கியங்களில் அடங்கி இருக்கிறது.

> எல்லாம் உடைய அருட்பெருஞ்ஜோதி அற்புதக் கடவுளே! இது தொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கியத்தடையாகிய சமயங்கள் மதங்கள் மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும், வருணம் ஆசிரம முதலிய

உலகர்சார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்திற் பற்ருத வண்ணம் அருள் செய்தல் வேண்டும்.

சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லக்ஷியமாகிய ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், எவ்வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும்.

எல்லாமாகிய தனிப் பெருந்தலைமை அருட்பெருஞ்ஜோதியாண்டவரே! தேவரீர் திருவருட் பெருங்கருணைக்கு வந்தனம், வந்தனம்.

அடிகளின் சித்திற்குப் பிறது வழிபாடு விட்டுப் போயிருந்த சபைக்குத் திரு ஸ்ரீ கிருபானந்த வாரியார் அவர்கள் திருப்பணி செய்து, 1950 ஏப்ரல் 24 தேதியன்று கும்பாபிஷேகத்தை நடத்திஞர்.

# அத்தியாயம் 17

## சித்தி வளாகமும் ஞானசித்தியும்

1870—ல் வடலூரிலிருந்து மேட்டுக் குபபத்தில் சித்தி வளாக மாளிகையில் உறைவிடம் ஏற்படுத்திக் கொண்ட பின் ,1872–ல் வடலூரில் சத்தியஞான சபை கட்டி முடியும்வரை, அடிகள் புறக் காரியங்களில் கவனம்செலுத்தி வந்தார். அதன் பிறகு அவர் படிப்படியாக இத்தகைய அலுவல்களைக் குறைத்துக் கொண்டு யோகத்திலும் சித்தி சாதனங்களிலும், சதானந்தசகஜ நிஷ்டைகளிலும் ஈடுபடலானார். தீச்சட்டிகளிடையே அமர்ந்து பிரமதண்டிகா யோகம் செய்தார். இந்நிலையில் அவர் இறைவன் தமக்கு யோகநிலையை ஒருநாள் மாலையிலும், அதன் பலன்களை மறுநாள் காலையிலும் அளித்ததாகக் கூறுகிறார்:

ஒரு நாழிகையில் யோகநிலையை
யுணர்த்தி மாலை யே
யோகப் பயனை முழுது மளித்தாய்
மறுநாட் காலை யே.

முத்தியை அடைவது ச் த்தியின் பொருட்டே என்று அருட்பெருஞ்ஜோதி அகவலில் அடிகள் கூறுகிறார்:

புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை
அடைவதென் றருளிய அருட்பெருஞ்ஜோதி

இதுவே தம் அனுபவம் என்று கூறுகிறார்:

முத்தியைப் பெற்றேனம் முத்தியினால் ஞான
சித்தியை யுற்றேனென் றுந்தீ பற
சித்தனு மானேன் றுந்தீ பற.

முத்தி அல்லது பாசநீக்கம் ஒரு சாதனமே, சித்தி அதனால் கிட்டும் அனுபவநிலை, சிவப்பேறு என்கிறார்:

முத்திஎன் பதுநிலை முன்னுறு சாதனம்
அத்தக வென்றஎன் அருட்பெருஞ்ஜோதி
சித்திஎன் பதுநிலை சேர்ந்த அனுபவம்
அத்திறம் என்றஎன் அருட்பெருஞ்ஜோதி

1870 அக்டோபர் மாதத்தில் ஒரு நாள் அவர் தம் உருவைப் பிறரிடமிருந்து மறைத்துக்கொண்டு, அங்ஙனமே சில நாட்கள் இருந்ததாகச் சொல்லுகின்றனர். இது கண்டு சாலையில் உள்ளோர் அஞ்சிடுவார்களோ என்று அவர்களுக்கு முன்னெச்சரிக்கை செய்தார். அந்த அறிவிப்பு பின்வருமாறு:

திருசிற்றம்பலம்

அன்புள்ள நம்மவர்களுக்கு அன்புடனறிவிப்பது

ஒருவனைப் பற்றி அனந்தம் பேர்களுக்கு நன்மையுண்டாம் என்பதை உண்மையாக நம்பியிருங்கள். என்னாலுங்களுக்கு நன்மை கிடைப்பது சத்தியம். நான் இன்னும் கொஞ்ச தினத்தில் திருவருள் வலத்தால் வெளிப் படுகின்றேன். அது பரியந்தம் பொறுத்திருங்கள். நான் மிகவும் சமீபத்தில் தானே வெளிப் படுவேன். அஞ்சவேண்டாம். சாலையை லகுவாய் நடத்துங்கள். திருசிற்றம்பலம்.

இவ்வறிவிப்பை அனுப்பிய பிறகு, அடிகள் தம்மை சித்தி வளாகத்தில் தாழிட்டுக் கொண்டு விட்டார். பல நாட்கள்

வெளிப் படவில்லை. அவரைப் பற்றிய குறி எதுவும் தென்படவில்லை. பின்னர் அவர் தாமே வெளிப்பட்டார்.

இவ்விதம் சில தடவை நடந்ததாகச் சொல்லப் படுகிறது.

இது சம்பந்தமாய் தேகசித்தியைப் பற்றியொரு சிறு விளக்கம் தருவது மிகையாகாது. அடிகள் தம் பாடல்களிலும் உபதேசங்களிலும், நாம் அறிந்துள்ள இயல் தேகத்திற்குமேல் சுத்த மாதி தேகங்கள் மூன்றை விவரிக்கின்றார். இம் மூன்றை அழியா உடம்பு என்றும் நித்திய தேகம் என்றும் கூறுவர். இம்மூன்று சுத்த, பிரணவ, ஞான தேகங்கள் எனப்படும். இவைகளை முறையே ஒளிவடிவம், ஒலிவடிவம், வான்வடிவம் என்றும் சொல்லுவர். சுத்த தேகத்தை சுவர்ண தேகம் அல்லது பொன்னுடம்பு என்றும், ஞான தேகத்தை அருள் வடிவம் என்றும் சொல்லுவதுண்டு. இம்மூன்று தேகங்களுடைய இயல்புகள் முறையே பின் வருமாறு (அடிகளின் சொற்படி):

சுத்தமாதி மூன்று தேகங்களின் விவரம்:

1. சுவர்ணதேக விவரம் காரியரூபம், பரதேகம், பரவுணர்ச்சி, பரஅறிவு, பரத்துவம், பொன் வண்ணம், 12 வயது, பருவம்— நரை, திரை, பிணி, மூப்பு, மலம், ஜலம், வேர்வை, ஆகாரம், நித்திரை, தாகம், நிழல், முதலியன — இல்லாமை, ரோமவளர்ச்சி, தாழ்ச்சி இல்லாமை, அபரஞ்சி மாற்று, கர்ம சித்தி, கல்பதேகி, அபரமார்க்கி.

2. பிரணவ தேகம் காரிய காரணரூபம், பரம்பரதேகம், பரம்பர உணர்ச்சி, பரம்பர அறிவு, பரம்பர தத்துவம், 16 முதல் 108 வரையில் மாற்று, 5 முதல் 8 வயது, உரைபடாதது, தேகம்தோற்றும்பிடிபடாது, சர்வசித்தி, பிராணகல்பதேகி, பர அபர மார்க்கம்.

3. ஞானதேகம் காரணரூபம், எங்கும் பூரண வியாபகம், பராபர அறிவு, பராபர தத்துவம், அளவு கடந்த மாற்று, சப்தமய தரிசனம்,

சர்வமகா சக்தி, சர்வசுதந்தரம், உருவம் தோற்றியும் தோற்றுமலும் இருக்கும், கலாதீதன்.

அடிகள் தாம் மூன்று உடம்புகளையும் அடைந்து விட்டதாகக் கூறுகிறுர்:

நானே தவம்புரிந்தேன் நம்பெருமான் நல் அருளால்
நானே அருட்சித்தி நாடடைந்தேன்—நான்
அழியா வடிவம் அவைமூன்றும் பெற்றேன்
இழியாமல் ஆடுகின்றேன் இங்கு.

சுத்தவடிவும் சுகவடிவாம் ஓங்கார
நித்தவடிவும் நிறைந்தோங்கு– சித்தெனும் ஓர்
ஞானவடிவும் இங்கேநான் பெற்றேன் எங்கெங்கும்
தானவிளை யாட்டியற்றத் தான்.

ஊன உடம்பே ஒளிஉடம்பாய் ஓங்கிநிற்க
ஞான அமுதெனக்கு நல்கியதே—வானப்
பொருட்பெருஞ் சோதிப் பொதுவில் விளங்கும்
அருட்பெருஞ்சோதி அது.

அடிகளின் உருவம் போட்டோவில் பிடிபடவில்லை என்று சொல்லுகிறுர்கள். சில சமயங்கள் அவருக்குத் தெரிந்தும், சில சமயங்கள் தெரியாததுமாக, எட்டுமுறைகள் படம் பிடித்தனர். படத்தில் அவர் உருவம் விழாமல், அவருடைய ஆடைகளால் ஏற்பட்ட நிழலே விழுந்தது. அவருடைய உருவத்தை எப்படியாவது ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று விழைந்த அன்பர்கள் பண்ணுருட்டியிலிருந்து ஒரு குயவரை வரவழைத்து, மண்ணுல் அடிகளின் சிலை ஒன்றை செய்வித்தனர். அதை அவர்கள் அவரிடம்

காண்பிக்க, அவர் அதைக் கரத்தில் வாங்கி, 'பொன்னனை மேனி மண்ணாயிற்றோ?' என்றனர். அது அவர் கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்து உடைந்து போயிற்று. குயவர், தம் அன்பு மிகுதியால், மீண்டும் ஒரு திருவுருவம் செய்து அன்பர்களுக்கு அளித்தார். அவ்வுருவத்திலிருந்து எடுத்த படங்கள் தான் இப்பொழுது நம்மிடம் நிலவுபவை என்று சொல்லுகிறார்கள். அடிகள் தாம் சாகாப் பெருவாழ்வும் அதற்குரிய பிற சித்திகளையும் அடைய விழைந்ததையும் அவற்றை இறைவன் தமக்கு ஈந்ததையும் பற்பல பாடல்களிலும் உரைகளிலும் சொல்லியிருக்கிறார். பின் வருபவை அவற்றில் சில:

தந்தையைக் கண்டேனான் சாகாவரம் பெற்றேன்
சிந்தை களித்தேனென் றுந்தீபற

தாம் இறவாமையை இறைவனிடமிருந்து அடைந்து விட்டதாகவும் உலகத்தார் அனைவரும் அவ்விதமே உய்யக் கூடும் என்று அருளுகிறார்:

பெற்றேன் என்றும் இறவாமை
பேதம் தவிர்ந்தே இறைவன்எனை
உற்றே கலந்தான் நானவனை
உற்றே கலந்தேன் ஒன்றானோம்
எற்றே அடியேன் செய்த தவம்
யாரே புரிந்தார் இன்னமுதம்
துற்றே உலகீர் நீவிர் எலாம்
வாழ்க வாழ்க துனி அற்றே.

அழியா உடலின் இயல்பைக் காட்டி, அதைத் தாம் அடைந்து விட்டதாகவும் பிறரும் அடையக்கூடும் என்றும் கூறுகிறார்:

காற்றாலே புவியாலே ககனமத ளுலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறவியற்றுங் கொடுஞ்செயல்க
ளாலே
வேற்றாலே யெஞ்ஞான்று மழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்த
ளித்தா னெனக்கே
ஏற்றாலே யிழிவெனநீர் நினையாதீ ருலகீர்
எந்தையருட் பெருஞ்சோதி யிறைவனைச்சார்
வீரே.

செத்தாரை எழுப்புதல் சாத்தியம் என்கிறார்:

செத்தாரை எல்லாம் திரும்ப எழுப்புதல் இங்கு
எத்தால் முடியுமெனில் எம்மவரே—சித்தாம்
அருட்பெருஞ்ஜோதி யதனால் முடியும்
தெருட்பெரும் சத்தியம் ஈதே.

இறைவன் தம்மைப் பிள்ளையாக்கிக் கொண்டதாகத் தெரிவிக்கிறார்:

பேருற்ற உலகிலுறு சமயமத நெறிஎலாம்
பேய்ப்பிடிப் புற்றபிச்சுப்
பிள்ளைவிளை யாட்டென உணர்ந்திடா துயிர்கள் பல
பேதமுற் றங்கும் இங்கும்
போருற் றிறந்துவீண் போயினார் இன்னும் வீண்
போகாத படிவிரைந்தே
புனிதமுறு சுத்தசன் மார்க்கநெறி காட்டிமெய்ப்

பொருளினை உணர்த்திஎல்லாம்
ஏருற்ற சுகநிலை அடைந்திடப் புரிதிநீ
என்பிள்ளை ஆதலாலே
இவ்வேலை புரிகஎன் றிட்டினம் மனத்தில்வே
றெண்ணற்க என்றகுருவே
நீருற்ற ஒள்ளிய நெருப்பே நெருப்பினுள்
நிறைந்திருள் அகற்றும் ஒளியே
நிர்க்குணா னந்தபர நாதாந்த வரைஓங்கு
நீதிநட ராஜபதியே.

தம் தவம் பலித்து சித்தி கிட்டியதைக் கொண்டாடுகிறார்:

கட்டமும் கழன்றேன் கவலைவிட் டொழித்தேன்
கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமும் கிழித்தேன் தூக்கமும் துறந்தேன்
சாவையும் நோவையும் தவிர்த்தேன்
சிட்டமும் அடைந்தேன் சிற்சபை உடையான்
செல்வமெய்ப் பிள்ளைஎன் றொருபேர்ப்
பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்
பண்ணிய தவம் பலித்ததுவே.

மேலும்,

கொள்ளைஎன இன்பம் கொடுத்தாய் நினது
செல்வப்
பிள்ளைஎன எதற்குப் பெயரிட்டாய்—தெள்ளமுதம்
தந்தாய் சமரசசன் மார்க்கசங்கத் தேவைத்தாய்
எந்தாய் கருணை இது.

அடிகள் நிச்சயத்துடன் கண்டு நிலைத்த ஆனந்தநிலை தைத்திரீய உபநிடத்தில் வர்ணித்துள்ள ஆனந்த நிலையை நினைவுறுத்துகின்றது:

பிரம்மநிலை அடைந்த ரிஷி ஒருவர் கூறினார்:

> நானே உயிரொளி. என் மகிமை மலை போன்றது. நான் நிர்மலப் பிரம்மனில் உறைகின்றேன். நான் பரத்தின் சர்வசுதந்திரத்தில் உறைகின்றேன். நானே பிரம்மன், சுய ஒளியோன், ஞானி நான், அமரன் நான், அழிவில்லாதவன் நான்!

அடிகள் வடலூரிலும் மேட்டுக்குப்பத்திலும் அருளிய பாடல்கள், அடிகள் சித்தியடைந்து பல ஆண்டுகளுக்குப் பிறகு (முன்னொரு அத்தியாயத்தில் கூறியபடி) திருவருட்பாவின் ஆறும் திருமுறையாகப் பிரசுரிக்கப் பட்டன. முன் ஐந்து சமயரீதியாகவும் உருவத் தோத்திரங்களாகவும் இருக்க, ஆறாவது சமயாதீதமாகவும் அருவஞானப் பாடல்களாகவும் இருக்கின்றன. முக்கியமாக, அருட்பெருஞ்ஜோதி அகவல் அடிகளுக்கு அருட்பெருஞ்ஜோதி அநுபவம் கிட்டிய காலத்தில் பாடப்பட்டது என்று அடிகளோடு பழகிய ஆனந்தநாத சண்முக சரணாலய சுவாமிகள் கூறுகிறார். அடிகள் இதனை 18 ஏப்ரல் 1872–ல் முடித்தனர் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. இந்த அகவல் 1596 அடிகள் கொண்டு, ஆசிரியப்பா முன்பு கண்டிராத அளவுடையது என்ற பெருமை கொண்டது.

ஊரன் அடிகள் கூறுகிறார்:

> திருவருட்பாவை ஒரு ஞானஉடம்பாகக் கொண்டால், அதன் முகம் ஆறாந் திருமுறை. அதன் கண் அருட்பெருஞ்ஜோதி அகவல். அக்கண்ணுள் மணியாகத் திகழ்வது அருட்பெருஞ்ஜோதி என்னும் மந்திரம்.

இந்த இறுதி ஆண்டுகளில் அடிகள் உரைநடையிலும் சில எழுதினார். அவை அவர் அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரிடம்

செய்து கொண்ட நான்கு விண்ணப்பங்கள். மேலும் அவர் அவ்வப்போது சங்கத்திற்கு இட்ட அறிவிப்புக்களையும் கட்டளைகளையும் அவருடைய உரைநடை இலக்கியத்தில் சேர்க்கலாம். 'சாலை சம்பந்திகளுக்கு இட்ட சமாதிக் கட்டளை' என்ற தலைப்பில், 30 மார்ச்சு 1871 தேதியிட்ட அவருடைய கட்டளையிலிருந்து ஒரு பகுதி பின் வருமாறு:

> கர்ம கால முதலிய பேதங்களால் யார்க்காயினுந் தேக ஆனி நேரிட்டால், தகனஞ்செய்யாமல் சமாதியில் வைக்க வேண்டும். இறந்தவர்கள் திரும்பவுமெழுந்து நம்முடன் இருக்கப் பார்ப்போம் என்கிற முழு நம்பிக்கையைக் கொண்டு எவ்வளவுந் துயரப் படாமலும் அழுகுரல் செய்யாமலும் சிற்றம்பலக் கடவுள் சிந்தையுடனிருக்க வேண்டும். புருடனிறந்தால், மனைவி தாலி வாங்குதல் வேண்டாம். மனைவி இறந்தால் புருடன் வேறு கல்யாணப் பிரயத்தனஞ் செய்ய வேண்டாம். பிள்ளைகளிறந்தால், சஞ்சலிக்க வேண்டாம். கர்ம காரியங்கள் ஒன்றுஞ்செய்ய வேண்டாம். தெரிவிக்கத் தக்கவர்களுக்குத் தெரிவித்து, ஒரு தினத்தில் நேரிட்டவர்களுக்கு நேரிட்டமட்டில் அன்ன விரயஞ் செய்ய வேண்டும்.

சித்தி வளாகத்தில் அடிகள் செய்த உபதேசங்களில் முக்கியமாக இரண்டைப் குறிப்பிடலாம். அவை, 'திருவருண் மெய்ம்மொழி'யும் 'பேருபதேச'மும்.

'திருவருண்மெய்மொழி' அடிகளுடைய சீடர் ஒருவரால் தொகுக்கப் பட்ட அவருடைய பல உபதேசங்களின் சாரம். இதிலிருந்து ஒரு பகுதி பின் வருமாறு:

> சைவம் வைணவம் சமணம் பவுத்தம் முதலாகப் பல பெயர் கொண்டு பலபடவிரிந்த அளவிறந்த சமயங்களும், அச்சமயங்களிற் குறித்த சாதனங்களும், தெய்வங்களும், கதிகளும், தத்துவ சித்தி விகற்ப பேதங்களென்றும் அவ்வச் சமயங்களிற் பலபட விரிந்த வேதங்கள் ஆகமங்கள்

> சாத்திரங்கள் புராணங்கள் முதலிய கலைகள் எல்லாம் தத்துவ சித்திக் கற்பனைக் கலைகளென்றும், வேதாந்தம் சித்தாந்தம் முதலாகப் பல் பெயர்கள் கொண்டு பலபட விரிந்த மதங்களும் மார்க்கங்களும் சுத்த சன்மார்க் கானுபவ லேச சித்தி பேதங்களென்றும் கேள்விப்பட்டிருக்கின்றனம். ஆகலில், அத்திரு வார்த்தைகளில் உண்மையான நம்பிக்கை கொண்டு அவ்வற்றின் உண்மைகளை உள்ளபடியே உணர்த்தப் பெற்று, அவைகளின் அனுபவங்களை அடைதல் வேண்டுவது பற்றி, அவ்வச் சமய மதாசாரங்களைச் சிறிதும் அனுட்டியாது நிற்றலும் அவற்றில் சத்திய வுணர்ச்சி கொள்ளாமல் விடுதலும் வேண்டும்.

அடிகளுடைய உபதேசங்களில் அவருடைய கடைசி உபதேசம் மஹோபதேசம் என்றும் பேருபதேசம் என்றும் வழங்குகிறது. 1873 அக்டோபர் 22ம் தேதி, புதன் கிழமை காலை எட்டு மணிக்கு அடிகள் சித்தி வளாகத்திருமாளிகையில் சன்மார்க்கக் கொடியைக் கட்டிய சமயத்தில், அவர் செய்த உபதேசம் இது. கொடியை அடிகள் நம் உடம்பிலுள்ள ஞான நாடிக்குப் புறச்சின்னமாய் அமைத்தார். இந்த நாடி, நாபியிலிருந்து, ஆன்ம ஒளியின் இருப்பிடமான புருவமத்தி வரை செல்லுகிறது என்றும், அனுபவத்தினால் மட்டுமே அறியக் கூடியது என்றும் பகர்வர். இந்தப் பேருபதேசம் அடிகளின் முடிவான நெறிக் கொள்கைகளைக் காட்டுகின்றது:

> இங்குள்ள நீங்கள் எல்லவரும் இதுவரைக்கும் இருந்ததுபோல் இனியும் வீண்காலம் கழித்துக் கொண்டிராதீர்கள். இது முதல் சாலைக்கு ஆண்டவர் போகிற—பத்துத் தினமாகிய கொஞ்சகாலம்—வரையில், நீங்களெல்லவரும் நல்ல விசாரணையில் இருந்து கொண்டிருங்கள். அந்த விசாரணை எது வென்றால் நம் நம்முடைய நிலை எப்படிப்பட்டது? நமக்கு மேல் நம்மை யதிஷ்டிக்கின்ற தெய்வத்தினுடைய நிலை எப்படிப்பட்டது என்று விசாரிக்க வேண்டியது.

.... இதற்குமேற்பட, நாம் நாமும் முன் பார்த்தும் கேட்டும் லக்ஷியம் வைத்துக் கொண்டிருந்த வேதம் ஆகமம் புராணம் இதிகாசம் முதலிய கலைகள் எதனிலும் லக்ஷியம் வைக்க வேண்டாம்.... அணுமாத்திரமேனுந் தெரிவிக்காமல், பிண்ட லக்ஷணத்தை அண்டத்தில் காட்டினார்கள். யாதெனில் கைலாசபதி என்றும் வைகுண்டபதி என்றும் பெயரிட்டு, இடம் வாகனம் ஆயுதம் வடிவம் ரூபம் முதலியவையும் ஒரு மனுஷ்யனுக்கு அமைப்பதுபோல் அமைத்து, உண்மையாக இருப்பதாகச் சொல்லியிருக்கின்றார்கள்.... அவைகளில் ஏகதேச கர்ம சித்திகளைக் கற்பனைகளாகச் சொல்லியிருக்கிறார்கள்.

.... ஒவ்வொரு சித்திக்குப் பத்து வருஷம் எட்டு வருஷம் பிரயாசைஎடுத்துக் கொண்டால், அற்ப சித்திகளை அடையலாம். அதற்காக அவற்றில் லக்ஷியம் வைத்தால், ஆண்டவரிடத்தில் வைத்துக் கொண்டிருக்கிற லக்ஷியம் போய்விடும். ஆண்டவரிடத்தில் வைத்த லக்ஷியம் போய்விட்டால், நீங்கள் அடையப் போகிற பெரிய பிரயோஜனம் போய்விடும். அல்லது அதில் முயற்சி செய்து, அவ்வளவு காலம் உழைத்து, அந்த அற்பப் பிரயோஜனத்தைக் தெரிந்து கொண்டு, அதனால் ஒரு லாபத்தை ஏகதேசம் அடைந்தால் முக்கிய லாபம் போய்விடும். ஆகையால், அவைகளில் லக்ஷியம் வைக்காமல், ஆண்டவரிடத்திலேயே லக்ஷியம் வைக்க வேண்டியது.

.... இது போல் சைவம், வைணவம் முதலிய சமயங்களிலும், வேதாந்தம் சித்தாந்தம் முதலிய மதங்களிலும் லக்ஷியம் வைக்க வேண்டாம்.... ஏனெனில் அவைகளிலும்... அற்பப் பிரயோஜனம் பெற்றுக்கொள்ளக் கூடுமேயல்லது, ஒப்பற்ற பெரிய வாழ்வாகிய இயற்கை யுண்மை என்னும் ஆன்மானுபவத்தைப் பெற்றுக் கொள்கின்றதற்கு முடியாது. ஏனெனில் நமக்குக் காலமில்லை. மேலும் இவைகளுக்கெல்லாம் சாக்ஷி நானே இருக்கிறேன். நான் முதலில் சைவ சமயத்தில் லக்ஷியம் வைத்துக் கொண்டிருந்தது இவ்வளவென்று

அளவு சொல்லமுடியாது.... அப்படி லக்ஷியம் வைத்ததற்கு சாக்ஷி வேறே வேண்டியதில்லே. நான் சொல்லியிருக்கிற—திருவருட்பாவில் அடங்கியிருக்கிற—ஸ்தோத்திரங்களே போதும். அந்த ஸ்தோத்திரங்களேயும் மற்றவர்களுடைய ஸ்தோத்திரங்களேயும் சபைக்குக் கொண்டுவந்தால், அவைகளே சாக்ஷி சொல்லிவிடும். ஏன் அவ்வளவு மிகுந்த அழுத்தம் எனக்கு அப்போதிருந்ததென்ருல், அப்போது எனக்கு அவ்வளவு கொஞ்சம் அற்ப அறிவாக இருந்தது.

இப்போது ஆண்டவர் என்னே ஏருத நிலேமேலேற்றியிக்கின்ருர். இப்போது எல்லாவற்றையும் விட்டு விட்டதிஞல் வந்த லாபம் இது. ஆதலால் நீங்களும் விட்டு விட்டீர்களாஞல் என்னேப்போல் பெரிய லாபத்தைப் பெறுவீர்கள்....

என்னே இந்த இடத்துக்குத் தூக்கிவிட்டது யாதெனில்... 'கருணேயும் சிவமே பொருளெனக் காணும் காட்சியும் பெருக' என்றதுதான். என்னே யேருநிலே மிசை யேற்றிவிட்டது யாதெனில் தயவு. தயவு என்னுங்கருணே தான் என்னேத் தூக்கி விட்டது.

அந்தத் தயவுக்கு ஒருமை வரவேண்டும். அந்த ஒருமை இருந்தால்தான் தயவு வரும். தயவு வந்தால்தான் பெரியநிலே மேல் ஏறலாம். இப்போது என்னுடைய அறிவு அண்டாண்டங்களுக்கு அப்பாலும் கடந்திருக்கிறது. அது அந்த ஒருமையிஞலேதான் வந்தது.

....ஒரு பதார்த்தத்தை அனுபவித்தா லல்லது அந்தப் பதார்த்த்தினுடைய ருசி தெரியாது. ருசி தெரியாத பதார்த்தத்தின் மேல் இச்சைபோகாது. அதுபோல், தெய்வத்தை யுள்ளபடி, அநுபவித்தா லல்லது தெய்வத்தினிடத்தில் பிரியம் வராது. ஆதலால், தெய்வத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்கிற முக்கிய லக்ஷியத்திலிருந்து கொண்டு விசாரஞ் செய்து கொண்டிருங்கள்.

....இவ் விசாரஞ் செய்து கொண்டிருந்தால் ஆண்டவர் வந்தவுடனே கண்டமாக உங்களுக்குத் தெரிவிக்க வேண்டியதைத் தெரிவிப்பார். மறுபடியும் உங்களுக்கு உரிமை வந்தவுடனே அகண்டமாகத் தெரிவிப்பார். ஆதலால் நீங்கள் இந்த முயற்சியிலிருங்கள். இரண்டரை வருஷமாக நான் சொல்லிக் கொண்டுவந்தேன். இனிச் சொல்லுபவர்கள் சிலநாள் தடை பட்டிப்பார்கள். இனி நீங்கள் இதுவரைக்கும் இருந்தது போல் இராதீர்கள்.

இது கடைசி வார்த்தை....

இந்த உபதேசத்தில், அவர்களுடைய பாடல்களில் காண்பது போல், அடிகளின் அகத்திலே எரிந்து கொண்டிருந்த ஜோதியின் உந்தலை, அருளை, காணலாம். அதாவது, மக்களை ஈடேற்ற வேண்டும், அவர்களும் தம்மைப்போல் சுத்த சன்மார்க்கத்தை அறிந்து, அதனால், தம்மைப்போல் சாகா வரம் பெற வேண்டும், நித்திய இன்ப வாழ்வு வாழவேண்டும் என்னும் ஆர்வம். 'இத் தேகத்தைப் பெற்ற எல்லாச் சீவர்களுக்கும் எனக்கறிவித்த வண்ணமே அறிவித்து, அவரவர்களையும், உரிமையுடையவர்களாக்கி வாழ்வித்தல் வேண்டும். தேவரீர் பெருங் கருணை ஆட்சிக்கு வந்தனம், வந்தனம், என்று அடிகள் 'சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பத்தில்' விண்ணப்பித்துக் கொள்கிறார்.

இந்த பேருபதேசத்தில் அடிகளுக்குத் தம் சீடர்களின் ஒழுக்கமின்மையினாலும் சிரத்தைக் குறைவினாலும் ஏற்பட்ட வருத்தம் லேசாகத் தென்படுகிறது. இந்த வருத்தம் அடிகளின் (9–3–1872 தேதியிட்ட) 'சாலையிலுள்ளார்க்கு இட்ட ஒழுக்கக் கட்டளை'யிலும், (25–11–1872 தேதியிட்ட) 'சித்தி வளாகத்திலும் தருமச்சாலையிலும் வசிப்பவர்கள் பரஸ்பரம் பழகுவதற்கு எச்சரிப்புப் பத்திரிக்கையிலும்

நன்கு தெரிகிறது. இதனால் ஏற்பட்ட (அடிகளின் மொழியில்) 'சலிப்பினால்' அவர் ஒரு சமயம் அவர்களிடம் இதர தேசங்களிலிருந்துத்தாம் காட்டிய உண்மைகளை எடுத்துச் சொல்ல சகோதரர்கள் வருவர் என்று பேச்சுப் போக்கில், பிரம்மஞான சபை (தியஸாபிகல் ஸொஸைட்டி)யின் வருகையை முன்னறிவித்தனர்.

# அத்தியாயம் 18

## காப்பிட்டுக் கொளல்

சாலையிலுள்ளாருடைய ஒழுக்கக் குறைவினாலும் உலகியல் நோக்கினாலும் சொற்பூசல்களாலும் அடிகள் மனம் நொந்தார். 9—3—1872 தேதியிட்ட ஒழுக்கக் கட்டளையில், 'இந்தச் சாலையால் எனக்கு மிகவும் சலிப்புண்டாகிறது... சன்மார்க்கத்திற்கு ஒத்து வாயடங்கி மனமடங்கி இருக்கவேண்டும். என் மேற் பழியில்லை, சொல்லிவிட்டேன். பின் வந்ததைப் பட வேண்டும்,' என்று எச்சரித்தார். பிறகு 25—11—1872 தேதியிட்டு, 'எச்சரிக்கைப் பத்திரிக்கை' என்றே குறித்து, 'ஆண்டவன் ஒருவன் உள்ளார் என்றும், அவர் பொதுப்பட உலகத்திலுள்ளார் யாவரும் சன்மார்க்கப் பெரும்பயன் பெற்று நித்திய வாழ்வு வாழ்தற் பொருட்டு வெளிப்படக் காரியப்படுகின்றனர் என்றும், அது காலையில் நாமும் ஆன்ம லாபத்தைப் பெற்றுக் கொள்ளுவோம் எனவும் நம்பி இங்கே வசிக்கும் யாவரும் வழிபாடு விஷயத்தில் ஒரு தடையும் சொல்லாது ஒத்து இருத்தல் அவசியம்... குரோதத்தால் விளையும் துவேஷாதிகள் உண்டாயினும், அல்லல் உண்டாகிறதாயிருந்தாலும், உடனே ஜாக்கிரதைப் பட்டு அதை முற்றிலும் மறந்துவிடல் வேண்டும்.... தாங்கள் எதிர்த்து வார்த்தையாடாமல் கூட்டத்தாரில் அப்போது இருக்க வாய்ந்த இரண்டொருவருக்குத் தெரிவித்தல் வேண்டும். அப்படி தெரிவிக்காதவர்களும், எதிர்த்துச் சண்டை தொடுப்பவர்களும் இங்கிருத்தல் அனுவசியம். அப்படிப் பட்டவர்கள் ஒரு பேச்சில்லாமல் இந்த இடம் விட்டுப் போய்விடத்தக்க முயற்சி ஒவ்வொருவரும் செய்தல் வேண்டும்,' என்று எச்சரித்தார்.

**18—7—1872—ல், அதாவது ஞான சவையை நிறுவிய ஆறு மாதங்களில், அடிகள் சபையை நடத்துவோர்கள் கவனிக்க**

வேண்டிய வழிபாட்டு விதிகளை வகுத்து, 'ஞான சபை விளக்க விபவ பத்திரிக்கை'என்ற தலைப்பில் வெளியிட்டனர். அவையாவன:

> வழிபாட்டிற்காக எவரும் சபைகளுக்குள்ளே செல்லக் கூடாது. வழிபாடு செய்விப்பதற்கென்று ஒருவரும் வேண்டியதில்லை, ஆகவே அதற்கென்று எவரும் சபைக்குள் புக ஏது இல்லை. விளக்கை வைப்பதற்கும் கவனிப்பதற்கும், சபையைத் தூசின்றி சுத்தம் செய்வதற்குமே குறிப்பிட்ட சிலர் போகலாம். அவர்கள் பன்னிரண்டு வயதிற்குக் கீழோ, எழுபத்திரண்டு வயதுக்கு மேலோ இருத்தல் வேண்டும், பொருள் இடம் மோகம் முதலியவற்றில் சிறிதும் இச்சை யில்லாதவர்களாக இருக்க வேண்டும். ஞான சபையின் திறவு கோல் ஒருவர் கையிலும் வெளிப்பட இருக்கலாகாது. அதைப் பூட்டிய பெட்டியில் பொற்சபையில் வைத்து, அப் பெட்டியின் திறவு கோல் உத்தரவாதியா யிருக்கின்றவர் வசம் இருக்க வேண்டும்.

இவ்விதிகளின்படி சபையாளர்கள் நடக்கவில்லை. இதனால் சலிப்புற்ற அடிகள் ஞான சபையை மூடி, அதன் திறவு கோலைத் தம்மிடம் சித்திவளாகத்தில் வைத்துக் கொண்டு விட்டனர். அதன் பிறகு அது மூடியே இருந்தது. அடிகள் சித்தி பெற்ற நான்காண்டுகளுக்குப் பின் 1878–ல் திறக்கப்பட்டது.

அடிகள் சித்திவளாகத்தில் 1873 அக்டோபர் 22 தேதியன்று கொடிகட்டிப் பேருபதேசம் அருளிய பிறகு, படிப்படியாகத் தம் புறக் காரியங்களைக் குறைத்துக் கொண்டு வந்தனர்.

1873 நவம்பர் மாதத்தில் தமது அறையிலிருந்த விளக்கை வெளியே வைத்து, அன்பர்களுக்குப்பின் வருமாறு கட்டளையிட்டனர்:

> இதைத் தடைப்படாது ஆராதியுங்கள். இந்தக் கதவைச் சாத்திவிடப் போகிறேன். இனிக் கொஞ்ச காலம் எல்லோரும், ஆண்டவர் இப்போது

*தீபமுன்னிலையில் விளங்குகிற படியால், உங்களுடைய காலத்தை வீணிற் கழிக்காமல், 'நினைந்து நினைந்து,' என்னும் தொடக்கமுடைய, 28 பாசுரமடங்கிய பாடலிற் கண்டபடி தெய்வ பாவனையை இந்தத் தீபத்திற் செய்யுங்கள். நானிப்போது இந்த உடம்பி லிருக்கின்றேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்.*

இக் · கட்டளையிலிருந்து அடிகள் இறைவனின் வருகையையும் தம் சித்தியையும் எதிர்பார்த்தனர் என்று தெரிகிறது. இதை அவர் தெளிவாகவே, இக் கட்டளையில் குறிப்பிட்டிருக்கும் பாடலிலும் கூறியிருக்கிறார்:

*நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந் தன்பே*
*நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனால் உடம்பு*
*நனைந்துநனைந் தருளமுதே நன்னதியே ஞான*
*நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று*
*வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மின் உலகியலீர்*
*மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்*
*புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்*
*பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே.*

பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் பிறர்க்கு இல்லாவிடினும் அடிகளுக்கு வந்துவிட்டது. பாடலில் 'சத்தியம்' இருப்பதில் ஐயமே இல்லை. இன்னொரு பாடலில் பாடுகிறார்:

**மெய்விளக்க வெனதுதந்தை வருகின்ற தருணம்.**

அடிகள் அன்று தமது அறையிலிருந்து எடுத்து வெளியே வைத்த விளக்கு இன்றும் எரிந்து கொண்டிருக்கிறது. இத்திருவிளக்கும் ஞான சபைத்திருவிளக்கும் இன்றும் மக்களை அருட்குரல் கூவி அழைக்கின்றன.

விளக்கை வெளியே வைத்த அடிகள் தம் அறையின் கதவை மூடிக்கொண்டு, உள்ளேயே இருக்கலானார்கள். சில நாட்கள் உள்ளே இருப்பதும் சில நாட்கள் வெளியே வருவதுமாக இருந்தனர். வெளிவந்த நாட்களில் அங்கிருந்த மக்களுக்கு உரையாற்றுவார்கள். இதுவும் சீக்கிரமே முடிவுக்கு வந்து விடும் என்று அவர் கூறியதிலின்று விளங்கியது 'கடை விரித்தோம், கொள்வாரில்லை கட்டி விட்டோம்.' இப்போது இந்த உடம்பில் இருக்கிறோம், இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வோம்,' என்றார்.

மூன்று மாதங்கள் சென்றன. தைப்பூசம் வந்தது — 30 ஜனவரி 1874, வெள்ளிக் கிழமை. அதற்கு முந்திய இரவு அடிகள் அன்பர்கள் அனைவரையும் அழைத்துப் பின் வருமாறு கூறினர்:

> நான் உள்ளே பத்துப் பதினைந்து தினமிருக்கப் போகின்றேன். பார்த்து அவநம்பிக்கை அடையாதீர்கள். ஒருகால் பார்க்க நேர்ந்து பார்த்தால் யாருக்கும் தோன்றாது. வெறு வீடாகத் தானிருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார். என்னைக் காட்டிக் கொடார்.

பிறகு நடுநிசி, பன்னிரண்டு மணிக்கு அடிகள், 'அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரை வழிபட்டு உய்யுங்கள்,' என்று சுற்றியிருந்தோருக்கு அருள் மொழி கூறி, தமது அறைக்குள் சென்று, கதவைத் தாளிட்டுக் கொண்டனர். அறைக்குள் மறைந்தவர் உலகத்தோரிடமிருந்தே மறைந்து விட்டனர். அவர் ஜோதியில் கலந்து விட்டதாகவும் இறைவனுடன் ஐக்கியமாகி விட்டதாகவும் உலகத்தோர் முடிவு செய்தனர். அடிகளின் வாக்குகளைக் கொண்டே, அவர் இரண்டரை நாழிகையில் சித்தி பெற்றார்கள் என்று கூறுகின்றனர்:

என்சாமி எனதுரை என்உயிர் நாயகனூர்

இன்றுவந்து நான் இருக்கும் இடத்தில் அமர்
கின்றூர்

பின்சாரும் இரண்டரைநா ழிகைக் குள்ளே எனது

பேர்உடம்பில் கலந்துள்ளளே பிரியாமல்
இருப்பார்

தன்சாதி உடையபெருந் தவத்தாலே நான்தான்

சாற்றுகின்றேன் அறிந்திதுதான் சத்தியம்
சத்தியமே

மின்சாரும் இடைமடவாய் என்மொழிநின்
தனக்கே

வெளியாகும் இரண்டரைநா ழிகைகடந்த
போதே.

இங்ஙனம் இரண்டரை நாழிகையில் தாம் அருள் ஒளியில் கலந்ததாக அடிகள் ஒரு பதிகத்தின் பத்துப் பாடல்கள் ஒவ்வொன்றிலும் கூறியுள்ளார்.

அடிகள் தம் அறைக்குள் சென்று தாளிட்டுக் கொண்டு, பிறகு வெளியே வராமலே இருந்த செய்தி பரவி, மக்களிடையே ஒரு பரபரப்பை உண்டாக்கியது. பல வதந்திகள் எழுந்தன. கடைசியில் போலீஸ் விசாரணை நடந்தது. அடிகள் மறைந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு, தென்னூர்காடு ஜில்லா கலெக்டராயிருந்த ஜெ.எச். கார்ஸ்டன், ஐ.ஸி.எஸ்., அவர்களும், ரெவின்யூபோர்டு உறுப்பினர் ஜார்ஜ் பான்பரி, ஐ.ஸி.எஸ்., அவர்களும் சித்தி வளாகத்திற்கு வந்து, அதை பார்வையிட்டனர். அவர்களின் முன்னிலையில் கதவு திறக்கப்பட்டது. வெற்றறையைத் தான் கண்டனர். சந்தேகத்துக்கு இடம் கொடுக்கும் வகையில் ஒன்றுமில்லை. வெளியே ஏழைகளுக்கு அன்ன தானம் நடப்பதைத்தான் கண்டனர். இந்தத் தர்மத்திற்கு இருபது ரூபாய் நன்கொடை அளித்துச் சென்றனர்.

1906—ம் ஆண்டில் தென்னார்காடு ஜில்லா கெஸட்டீரில் அடிகளைப் பற்றிய குறிப்பு ஒன்று (பக்கங்கள் 316—317—ல்) வெளிவந்தது. திரு. ஊரன் அடிகள் செய்துள்ள இதன் தமிழாக்கத்திலிருந்து சில பகுதிகள் கீழே தருகிறோம்:

> பார்வதிபுரம் 1189 மக்களைக் கொண்ட ஒரு சிற்றூர். விருத்தாசலம் சாலையில் கடலூருக்குத் தென்மேற்கே 23வது மைலில் உள்ளது. இவ்வூர் இராமலிங்கப் பரதேசி என்பவருடன் தொடர்புடையது. பின்னாளில் வாழ்ந்த துறவிகளுக்கு அவர் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கினார். அவரைப் பின்பற்றியவர்கள் அவரைத் தெய்வமாகவே கருதினர்.
>
> இறந்தவர்கள் திரும்ப எழுந்து வருவார்கள் என்றும், இறந்தாரை எரிப்பதை விடப் புதைப்பதே சிறந்ததென்றும் இராமலிங்கப் பரதேசி வலிவாக உபதேசித்தார். இந்த நம்பிக்கையால் பிராமணர்களும் பிணங்களைப் புதைத்தார்கள். மக்கள் வெளியூர்களிலிருந்தும் இறந்தவர்களைக் கொண்டு வந்து வடலூரில் புதைத்தார்கள்.
>
> 1874—இல் கருங்குழியை அடுத்த மேட்டுக்குப்பத்தில் தாம் எப்போதும் சமாதி (தியானம்) கூடும் அறைக்குள் புகுந்து, சில காலம் திறந்து பார்க்க வேண்டாம் எனச் சீடர்களுக்குக் கூறித் தாழிட்டுக் கொண்டார். அதன்பின் அவர் காணப்படவில்லை. அவ்வறை இன்னும் பூட்டப்பட்டே உள்ளது. அவர் கடவுளோடு ஐக்கியமாகி விட்டார் என்று அவர் மீது நம்பிக்கையுடையோர் கருதுகின்றனர். காலம் வரும்போது நம்பிக்கையுள்ளவர்களுக்குத் திரும்பவும் தோற்றமளிப்பார் என்றும் நம்புகின்றனர்.

அடிகளின் சீடர்களில் ஒருவரான தண்டபாணி சுவாமிகள், அடிகள் தான் மீண்டும் வரப் போவதாகத் தம்மிடம் உரைத்ததாகக் கூறுகிறார். தண்டபாணி சுவாமிகள் இச் செய்தியை 'வருவானெனன் றுரைத்தானே,' என்று தாம் பாடிய

'அனுபவப் பதிக'த்தில் உள்ள பதினொன்று பாடல்களிலும் கூறுகிறார். அடிகளுடைய சீடர்கள் பலர், சன்மார்க்கத்தவர்கள், இந்த நம்பிக்கை கொண்டிருக்கின்றனர்.

மேலும் தண்டபாணி சுவாமிகள் ஒரு செய்தி, தாம் உணர்ந்தபடி, தருகிறார். அதாவது, அடிகள் முந்திய பிறவியில் தாயுமானவர் என்பது. இதைத் தாம் முருகப் பெருமானிடமிருந்து அறிந்ததாகக் கூறுகிறார்.

தண்டபாணி சுவாமிகளைப் போல் பல ராமலிங்க பக்தர்கள் அடிகள் திரும்பி வருவார் என்றே காத்துக்கிடக்கின்றனர். சிலர் அடிகள் முற்றறிந்த, முத்தி சித்திகள் பெற்ற, சுத்த சன்மார்க்கி ஆனதால், திரும்பி வரார் என்று சாற்றுகின்றனர். திரு ஊரன் அடிகள், 'ஞானசம்பந்தர் முதலானோர் வருவதைப் பற்றிய பேச்சில்லை. அது போன்றே அடிகளும் வருவதைப் பற்றிய பேச்சுக்கு இடமில்லை,' என்கிறார்.

ராமலிங்க வள்ளலார் மேட்டுக் குப்பத்தில் இறுதிக் காலத்தில் பாடிய ஒரு பாடலில், தம் வாழ்வை ஒளி தேடி ஒளி கண்ட ஓர் ஆன்மீக, ஆழிப் பிரயாணமாகச் சித்திரிக்கின்றார்:

கடல்கடந்தேன், கரையடைந்தேன்
கண்டு கொண்டேன்
கோயில் கதவு திறந்திடப்பெற்றேன்
காட்சியெலாங் கண்டேன்
அடர்கடந்த திருவமுதுண்டரு
ளொலியா லனைத்தும்
அறிந்துதெளிந்து அறிவுறுவாய்
அழியாமை அடைந்தேன்
உடல் குளிந்தேன் உயிர்கிளர்ந்தேன்
உள்ளமெலாந் தழைத்தேன்
உள்ளபடி யுள்ளபொருள் உள்ளவனாய்

நிறைந்தேன் இடர்தவிர்க்கும்
சித்தியெலாம் என்வசம் ஓங்கினவே
இத்தனையும் பொதுநடஞ்செய்
இறைவனருட் செயலே.

இப்பாடல் ஆங்கிலக் கவி டெனிஸனின் 'கடல் கடத்தல்' (Crossing the Bar) என்னும் கவிதையை நினைவு படுத்துகிறது:

பகலவன் படுத்தனன், மாலை மீன் மின்னுது,
ஆழிதாண்டி ஆண்டவனழைப்பு கேட்குது!
ஆழிமேல் கலம் கொண்டு கடக்கையிலே,
கடவுளே கடலலையைக் கட்டிடு!

கால தேசம் தெரியா முனைக்கு
கடற்புயல் என்னைக் கடத்தினாலும்,
வழி காட்டும் குருவே, உன்னை
இறுதியில் நேரே காண்பனே.

இவ்விரு பாடல்களிலும் உள்ள ஒற்றுமை நோக்கத் தக்கது. ஆனால் மேலாகத் தோன்றும் ஒற்றுமையை விட ஆழத்தில் இருக்கும் வேற்றுமைதான் அதிகம். உலகியல் கவி டெனிஸன் பிரயாண இறுதியில் வழிகாட்டும் இறைவனைக் காண விரும்புகிறார்; அவர் விரும்பும் அளவுக்குத் தான் போகமுடிகிறது. ஞானக்கவி வள்ளலார் ஆண்டவனின் தரிசனம் பெற்று, அருளும் பெற்று, அழியாமையும் அடைந்து விட்டோமென்ற நிச்சயமும் சித்தியும் அடைந்து விட்டார், அடைந்து விட்டோம் என்ற உணர்வையும் பெற்றிருந்தார்.

# அத்தியாயம் 19

## ராலிங்கரும் பிரம்மஞானசபையும்

மேட்டுக்குப்பத்தில் அடிகள், தாம் அதற்கு முன்பிருந்தே உபதேசித்து வந்த சுத்த சன்மார்க்கக் கொள்கைகளுக்கு சங்க ஒலி கொடுத்தார். சாதி சமய வழக்கை விட்டு, ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமைக்கும், அதிலிருந்து பிறக்கும் உயிரிரக்கத்திற்கும், இவை சுட்டும் அருட் பெருஞ்ஜோதி வழிபாட்டிற்கும் ஞானாசாரியரானார். மனிதன் பிற ஜீவன்களுடன் அமைத்துக் கொள்ளும் உறவே அவன் இறைவனுடன் அமைத்துக் கொள்ள வேண்டிய உறவுக்கு இலக்கணமாகும், ஆகவே உயிரிரக்கமின்றி அவன் சித்தி அடைய முடியாது என்றார். ராமலிங்கரின் இந்த இரக்கம் மண்ணுங்கட்டிவுரைச் சென்றது. மேலும் இந்த மார்க்கம் இறைவன் விளக்கம் என்றும், எல்லா சமயங்களும் பொதுவாய் எடுத்துக்கொள்ளக் கூடிய தத்துவம் என்றும், சமயங்கள் இந்த மைய உண்மையைச் சுற்றித் தங்கள் ஆசார சங்கற்ப விகற்பங்களையும் ஆசிரம உலகாசார விகற்பங்கள், அநுஷ்டானங்கள், கர்மங்கள், விதிகள், தெய்வங்கள் பலவற்றையும் அமைத்து, தங்கள் தங்கள் புராணங்களையும் பிரமாணங்களையும் உண்டாக்கிக் கொண்டன என்றும், அவை அனைத்தும் பொய்யே என்றும் உபதேசித்தார். மனித குல சகோதரத்துவமும், சர்வ சமய சமரசமும், ஆத்மஞானமும் பிரம்மஞானசபை (தியஸாபிகல் ஸொஸைட்டி) வகுத்துக் கொண்ட கொள்கைகள். அடிகள் அனைத்து உயிர்களையும் ஜடவஸ்துக்களையும் ஆன்மநேய ஒருமைப்பாட்டில் சேர்த்துக் கொண்ட அளவுக்கு பிரம்மஞான சபை செல்லாமல் இருந்தாலும், உயிரிரக்கம் இறைவனின் விளக்கமே, இறைவனுடன் ஒருமையைத் தரக் கூடியது என்று சுத்த

சன்மார்க்கம் உபதேசிக்கும் அளவுக்குப் போகாமல் இருந்தாலும், அது அனைத்துக்கும் மையமான ஆன்ம உண்மையைக் கண்டது.

அடிகள் 1865—ம் ஆண்டில் வடலூரில் சுத்த சன்மார்க்கத்தை ஆதாரமாகக் கொண்ட சங்கத்தை நிறுவியதற்குப் பத்து வருஷங்களுக்குப் பிறகு 1875—ம் ஆண்டில், வட அமெரிக்காவில் நியூயார்க் நகரில் நிறுவப்பட்ட பிரம்மஞான சபை சன்மார்க்க சபையின் விதேசப் பிரதி எனலாம்.

சமரசவேத சன்மார்க்க சங்கம் என்பது அடிகள் சங்கத்தை நிறுவிய பொழுது அதற்கு இட்ட பெயர். பின்னர், பெயரிலிருந்துகூட சமயங்களின் வாசனையை நீக்க வேண்டும் என்று அடிகள் அதை 'சமரச சுத்த சன்மாரக்க சத்திய சங்கம்' என்று மாற்றினர். என்றாலும் அடிகள் தம் ஞானத்தால் கண்டு கொண்ட அருட் பெருஞ்ஜோதி ஆண்டவர் சிவபெருமானின் விசேஷ வேற்றுமையே என்று கூறுவது மிகையாகாது. அடிகள் தம் அருட் பெருஞ்ஜோதி அகவலிலும் பிற பாடல்களிலும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரைச் சிவபெருமானுக்குரிய சிறப்புப் பெயர்களாலும் சொற்களாலும் வாழ்த்துவதால் இது தெரிகிறது. உதாரணமாகச் சில

1. சிற்சபை நடுவே திருநடம் புரியும்
அற்புத மருந்தெனும் ஆனந்த மருந்தே
(அருட்பெருஞ்ஜோதி அகவல் — 1330)

2. ஜோதியுட் ஜோதியுட் ஜோதி—சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுட் ஜோதி
ஜோதியுட் ஜோதியுட் ஜோதி

சிவமே பொருளென்று தேற்றி—என்னைச்
சிவவெளிக் கேறுஞ் சிகரத்தி லேற்றி

சிவமாக்கிக் கொண்டது பாரீர்—திருச்

சிற்றம் பலத்தே திருநட ஜோதி

(ஆனந்தக் களிப்பு — பல்லவி
சரணம் 1)

3. அருட் பெருஞ்சோ தியினால்

தான்மிகக்கண் டறிகஎனச் சாற்றியசற்
குருவே

சபையினடத் தரசேஎன் சாற்றும்
அணிந்தருளே

(அருள் விளக்கமாலை 89)

4. துப்பாக்கித் துணையாகித் துலங்கியமெய்த்
துணையே

சுத்தசிவா னந்தவருட் ஜோதிநடத் தரசே

(பிரியே னென்றல் – 1)

5. அருட்பெருஞ் சோதியை அன்புடன்
அளித்தே

சமரச சன்மார்க்க சங்கத்தின் முதலே

தனிநட ராஜஎன் சற்குரு மணியே

(சற்குரு மணிமாலை – 18)

6. அருட்சோதித் தெய்வம்எனை ஆண்டு
கொண்டதெய்வம்

அம்பலத்தே ஆடுகின்ற ஆனந்தத்
தெய்வம்

(பரசிவநிலை – 1)

7. சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்

இடம்என நான் தெரிந்தேன்

(பராபரன் உண்மைநிலையம் – 2)

மேற்படி ஐந்தாம் உதாரணத்தில், அடிகள் தமக்கு அருட்பெருஞ்ஜோதியை அளித்தது நடராஜன் என்கிறார். ஆம், சநாதன இந்து மதத்திலும் சிவபெருமான் ஒளி உருவே, ஒளிப் பிழம்பே, 'சித்' என்னும் ஆத்ம வெளியில் ஆனந்த நடம் புரியும் ஒளித் தெய்வமே. அடிகள் சநாதன மதத்திலிருந்து தாமே கண்டுகொண்ட உண்மையைப் பிரித்தெடுத்துக் கொண்டார். இவ்வாறு மதங்களிலிருந்து உண்மையை மாத்திரம் எடுத்துக் கொண்டு பிறவற்றை விட வேண்டும் என்று உபதேசித்துள்ளார்.

அதே மு...றயில் பிரம்மஞான சபை இந்து மதத்திலிருந்து சிலவற்றை எடுத்துக் கொண்டது. முக்கியமாக, உபநிடதங்கள் விளக்கும் ஆத்ம வித்தை — அதாவது சகல அண்டங்களும் சகல பிண்டங்களும் தெய்வங்களும் சச்சிதானந்த பிரம்மனின் பல வேறுபட்ட தோற்றங்கள் என்ற திண்ணம். மேலும் கர்ம வினை, மறு பிறப்பு, சீவன்களின் ஆன்ம வளர்ச்சி முதலிய தத்துவங்களை எடுத்துக் கொண்டது, மற்றும், மனிதன் பரிசுத்தத்தினாலும் சாதனத்தாலும் உயர்நிலையை அடையக் கூடும், இவற்றால் பிரம்மஞானத்தையும், அதுவேயான பிரம்மநிலையையும் அடையலாம் என்ற ஆத்ம அநுபவத்தை ஒப்புக் கொண்டது. அவ்வாறு அந்நிலையை எய்திய சித்தர்கள் உலகில் இருக்கிறார்கள், நம் புலன்களுக்கு எட்டாமல் உலகை இயக்குகிறார்கள் என்ற முடிவையும் ஏற்றுக் கொண்டது. இத்தகைய விசேஷப் புருஷர்களை மகாத்மாக்கள் என்று கூறுகிறது. தாமே அற்புத சித்தரான, மகாத்மாவான அடிகளும் இவற்றை எடுத்து விளக்கினார், தம் வாழ்விலேயே காண்பித்தார்.

பிரம்மஞானசபை என்று சொல்லக் கூடிய தியாசபிகல் ஸொஸைட்டி நியூயார்க் நகரில் 1875 செப்டம்பர் 7ம் தேதியில் ஹெலீனா பெட்ரோவ்னா பிளாவட்ஸ்கி அம்மையாரால் நிறுவப்பட்டது. இவர் 1831—லிருந்து 1891—ம் ஆண்டு வரை வாழ்ந்தார். இவர் திபேத்திய (Tibet தேசத்தில் தோன்றிய) மகாத்மாக்கள் தமக்கு ஞானம் வழங்கி, அந்த ஞானத்தைப் பரப்பும் படியாக ஆணையிட்டனர் என்று பலமுறை

கூறியுள்ளார். அவர் நிறுவிய ஞானப்பிரம்மசபைக்கு அவர் முதற் செயலாளராகவும் கர்னல் ஹென்ரி எஸ். ஆல்காட் முதற் தலைவராகவும் சேர்ந்து பணி புரிந்தனர்.

இவ்விருவரும் சென்னைக்கு வந்த பொழுது, அக்காலத்தில் சென்னை மகாணக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராகவும் அடிகளின் முதற்சீடராகவும விளங்கிய தொழுவூர் வேலாயுத முதலியார் இவர்களைச் சந்தித்தனர். தியசாபிகல் சொஸைட்டியாருக்கு ஒரு வாக்கு மூலம் கொடுத்தனர். அச்சமயம் தியசாபிகல் சொஸைட்டியின் உபதலைவராகவும், சென்னை சிறு வழக்கு நீதி மன்றத்தில் நீதிபதியுமாக இருந்த ஜி. முத்துசுவாமிசெட்டி அவர்களால் இது ஊர்ஜிதமாக்கப் பட்டது. இவ் வாக்குமூலம் பின்னர் 'பிரம்மஞானமறைபொருட் குறிப்புகள்' (Hints on Esoteric Theosophy) என்ற நூலிலும், 'பிரம்மஞான போதினி' (The Theosophist) பத்திரிக்கையின் 1882 ஜுலை இதழிலும் வெளி வந்தது. மீண்டும் அதே பத்திரிக்கையின் 1969 செப்டம்பர் இதழிலும் பிரசுரிக்கப் பட்டது. அதிலிருந்து சில பகுதிகளைத் தருகிறோம். தமிழாக்கம் திரு ஊரன் அடிகளது:

'பிரம்மஞானத்தின் மறைபொருட் குறிப்புகள் (Hints on Esoteric Theosophy) என்னும் நூலின் ஆசிரியருக்கு:

ஐயா,

நான், தென்னிந்தியாவில் புகழ் வாய்ந்த யோகியரான அருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்க பிள்ளையவர்களின் சீடன். மகாத்மாக்கள் இருக்கிறார்களா என்பதிலும் அவர்களது விசேஷகட்டளைப் படியே பிரம்மஞான சபை ஏற்படுத்தப் பட்டதா என்பதிலும் ஆங்கிலேயரும் இந்தியருட் சிலரும் ஐயுறுவதாகத் தெரிகிறது. தாங்கள் பெரிதும் உழைத்து மகாத்மாக்களைப் பற்றி எழுதி வரும் நூலைப் பற்றிக் கேள்வியுற்றேன். எனது குருவைப் பற்றிய சில செய்திகளை வெளிப்படுத்த விரும்புகிறேன். அவை முற் கூறிய ஐயங்களை அகற்றுவதோடு,

> பிரம்மஞானம் பொருளற்றதொரு மயக்கமன்று என்பதையும் பிரம்ம ஞானசபை வலிவற்ற அடிப்படையில் அமைக்கப்பட்டதன்று என்பதையும் மெய்ப்பிக்கும் என நம்புகிறேன்.

இதற்கு மேல் திரு வேலாயுத முதலியார், ராமலிங்க அடிகளின் வாழ்க்கையையும் உபதேசங்களையும் சுருக்கமாகக் குறிப்பிட்டு விட்டுத் தொடர்ந்து கூறுகிறார். (தமிழாக்கம் திரு ஊரன் அடிகளது):

> அகில உலக சகோதரத்துவத்தின் அடிப்படையில் வேதாந்தத்தின் உண்மைக் கருத்துக்களைப் பரப்புவதற்காக 'சமரச வேத சன்மார்க்க சங்கம்' என்றொரு சங்கத்தை 1867—ம் ஆண்டில்* நிறுவினார். அவரது கொள்கைகள் பிரம்மஞான சபையின் கொள்கைகளை ஒத்தன. எங்கள் சங்கம் ஐந்தாறு ஆண்டுகளே நிலவிற்று. அக்காலத்தில் பேரெண்ணிக்கையான ஏழைகளுக்குச் சங்க உறுப்பினர்கள் செலவில் அன்னதானம் செய்யப்பட்டது.
>
> . . . . . .
>
> 1873ம் ஆண்டின் முற்பாதியில் மனித சகோதரத்துவத்தை மிகவும் வற்புறுத்திப் போதித்து வந்தார். அவ்வாண்டு இறுதி மூன்று மாதத்தில் பேசுவதையும் உபதேசிப்பதையும் அறவே விடுத்து இடையறா மௌனத்தில் ஆழ்ந்தார். 1874 ஜனவரி மாதம் இறுதி நாள்களில் பேசத் தொடங்கித் தாம் கூறிவரும் தீர்க்க தரிசனங்களை மீண்டும் கூறினார். அவை பின் வருவனவாம். அம்மாதம் 30ம் தேதி நாங்கள் மேட்டுக் குப்பத்தில் எங்கள் குருவைக் கடைசியாகப் பார்த்தோம். பின் ஒரு சமயம் தோன்றுவதாக உறுதியாகக் கூறியிருந்தாரெனினும் தோன்றும் காலம், இடம், சூழ்நிலைகளைத் தெரிவிக்கவில்லை. அப்படித் தோன்றும் வரை

* இதைத் தப்பிதமாகக் கொடுத்துள்ளார் வேலாயுத முதலியார். சங்சம் நிறுவப் பட்ட ஆண்டு 1865.

*இந்தியாவில் மட்டுமன்றி ஐரோப்பா அமெரிக்கா முதலிய மற்றெல்லாத் தேசங்களிலும் தக்கவர்களின் உள்ளத்தில் அதிட்டித்து உலகைத் திருத்தும் பணியில் வேலை செய்யப் போவதாகக் கூறினர்.....*

*கட்புலனாகிய அவரது இகவாழ்வின் பிற்பகுதியில் அடுத்தடுத்து அவர் கூறியதாவது 'உலக சகோதரத்துவத்தின் உண்மையான உறுப்பினர்கள் இந்தியாவுக்கு வடக்கே வெகு தொலைவில் இருக்கிறார்கள். .... ரஷ்யாவிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும், இன்னும் வெளிநாடுகளிலிருந்தும் வந்து இதே அகில உலக சகோதரத்துவத்தைப் பிரச்சாரம் செய்யும் காலம் வெகு தொலைவில் இல்லை...'*

*இந்த தீர்க்க தரிசனம் அப்படியே பலித்து விட்டது எனக் கருதுகிறேன். வடக்கே மகாத்மாக்கள் இருக்கிறார்கள் என்பது இந்துக்களுக்குப் புதிய கருத்தல்ல. ரஷ்யாவிலிருந்து மேடம் பிளாவட்ஸ்கியும் அமெரிக்காவிலிருந்து கர்னல் ஆல்காட்டும் இந்தியா வருவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னமே அவர்கள் வருகை இங்கு முன்னறிவிப்பாகக் கூறப்பட்டு வந்ததே. பின்னர் பிரம்ம ஞானசபை நிறுவக் கட்டளையிட்ட மகாத்மாக்களுடன் எங்கள் குரு தொடர்பு உடையவர் என்பதற்கு மறுக்கவொண்ணாச் சான்றாகும்.*

இந்த வாக்குமூலத்திற்கு 'தியாஸபிஸ்ட்' பத்திரிக்கையின் அதே (1882 ஜுலை) இதழில் இதழாசிரியர் பிளாவட்ஸ்கி அம்மையார் பின்வருமாறு முன்னுரை எழுதினர் (தமிழாக்கம் ஊரன் அடிகளுடையது):

*'அக்கல்ட் ஒர்ல்டு' (இரகசிய உலகம்) பத்திரிக்கையின் ஆசிரியர் நேரிடையான சவால் ஒன்றுக்கு மறுமொழியாக 4—4—1882—ம் தேதிய பம்பாய் கெஸட்டுக்கு ஒரு கடிதம் எழுதினர். 'அக்கல்ட் ஒர்ல்டி'ல் எழுதிய போதே நான் குறிப்பிட்டுள்ள சித்த சகோதரர்களின் திருக்கூட்டத்துடன் பிரம்ம ஞான சபை பிளாவட்ஸ்கி*

> அம்மையார் மூலம் தொடர்புடையது என்று உறுதியாக அறிவேன். இப்போது அது சரிதான் என்று மேலும் விளக்கமாக அறிகிறேன்'. என்று தமது நம்பிக்கையை உறுதிப் படுத்திக் கடிதத்தைத் தொடங்கினர். நம்முடைய ஆப்த நண்பர் மேலே கூறப்பட்ட வரிகளை எழுதியபோது, தம்முடைய உறுதியான கூற்று பிற்காலத்தில் ஆயிரக்கணக்கான வர்களுடைய சாட்சியத்தால் நிரூபிக்கப் படும் என்று சிறிதும் நினைத்திருக்க மாட்டார். ஆனல் அதுதான் இன்றைய நிலை. நம்பிக்கையற்றவர்களும் பாரபட்ச முடையவர்களும் அல்லது சுயநல சாட்சிகளும் இதைப் பற்றிப் பொதுவாகத் தூற்றலாம். ஆனல் உண்மையை மறுக்க முடியாது. எங்களைப் பைத்தியக்காரர்களாகவோ அல்லது ஏமாற்றுபவர்களாகவோ கருதாத சில நண்பர்களாவது கீழே கொடுக்கப்பட்டுள்ள வாக்கு மூலத்தைப் படித்து மகிழ்வார்கள்.
>
> நாங்கள் சென்னையிலிருந்தபோது பிரசிடென்ஸி காலேஜ் பண்டிதரான பிரபல தமிழறிஞர் ஒருவர் எங்களைச் சந்தித்துப் பேச விரும்பினர்.... சந்தித்தவர் • எங்களைக் கேட்ட கேள்விகள் எல்லாவற்றையும் கூறுவதை விட (1) எங்கள் சொசைட்டி இந்திய திபேத்திய மகாத்மாக்களின் நேரிடைத் தூண்டுதலால் ஏற்படுத்தப் பட்டது. (2) அவர்களது விருப்பத்துக்குக் கீழ்ப்படிந்தே இந்த நாட்டுக்கு வந்தோம் என்று நாங்கள் திரும்பத் திரும்பக் கூறுவதை வலிவாக உறுதிப் படுத்தும் வேறு சிலவற்றைக் கூறலாம். இவ்விவரங்களிலிருந்து உண்மையை அவரவர்களே அனுமானித்துக் கொள்ளும்படி விட்டு விடுகிறோம்.

தொழுவூர் வேலாயுத முதலியாரின் வாக்குமூலத்தின் கீழும் பிளாவட்ஸ்கி அம்மையார் மற்றொரு (பின்) குறிப்பு எழுதினர்— 'தியாஸபிஸ்ட்' பத்திரிக்கை 1882—ம் ஆண்டு ஜூலை இதழில். (தமிழாக்கம் திரு ஊரன் அடிகளுடையது):

> கெட்ட எண்ணங்களையும் சந்தேகங்களையும் போக்குமாறு எதிர் கால நிகழ்ச்சியைத் தீர்க்க

தரிசனமாய்க் கூறியதற்கு இது ஒரு சான்றாகும். சான்று கூறுபவரின் கௌரவமும் அவரது குருவின் தீர்க்க தரிசனச் செய்திகள் எங்கும் நன்கு பரவியிருப்பதும், தியாசபிகல் சொசைட்டி நிறுவப்படவிருப்பதையும் அது இந்தியாவுக்கு வந்து செயல்படுமென்பதையும், வதந்தியாலோ பத்திரிக்கை வாயிலாகவோ அவர் அறிந்திருக்க முடியாதென்பதும் - இவை எல்லாம் சொசைட்டியை நிறுவக் கட்டளையிட்ட மகாத்மாக்களுக்குள் இராமலிங்கயோகியும் ஒருவர் என்பதை உறுதிப் படுத்துகின்றன.

1873 மார்ச் மாதத்தில் ரஷ்யாவிலிருந்து பாரிஸுக்குச் செல்லுமாறு நாங்கள் கட்டளையிடப் பட்டோம். ஜூன் மாதம் அமெரிக்கா செல்லுமாறு சொல்லப் பட்டோம். ஜூலை 6—ல் அமெரிக்காவை அடைந்தோம். இந்தக் காலம்தான் இராமலிங்கர் பின் நிகழவிருப்பதைத் தீவிரமாக அறிவித்துக் கொண்டிருந்த காலம். 1874 அக்டோபரில் வெர்மௌண்ட் சிட்டென்டனுக்குப் போகுமாறு அறிவிப்புக் கிடைத்தது. ஆன்மீக ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருந்த கர்னல் ஆல்காட்டை அங்கு பிரபல எட்டி குடும்பப் பண்ணையில் சந்தித்தோம். 1875 நவம்பரில் தியாசபிகல் சொசைட்டி ஏற்படுத்தப் பட்டது. 1878க்கு மேல் இந்தியாவிலுள்ள நண்பர்களுடன் தொடர்பு கொண்டதன் பயனாக சொசைட்டியின் தலைமை அலுவலகம் 1879 பிப்ரவரியில் பம்பாய்க்கு மாற்றப் பட்டது*.

* பம்பாயிலிருந்து சொசைட்டியின் தலைமை அலுவலகம் 1882ல் சென்னைக்கு மாற்றப்பட்டது.

# அத்தியாயம் 20

## அடிகளின் சுத்த மெய்யறிவு

அடிகள் திருவருண் மெய்ம்மொழியில், 'அவ்வற்றின் (அதாவது, பலபட விரிந்த அளவிறந்த சமயங்களின்) உண்மைகளை உள்ளபடியே உணர்த்தப் பெற்று, அவைகளின் அனுபவங்களை அடைதல் பற்றி, அவ்வச் சமய மதாசாரங்களைச் சிறிதும் அனுட்டியாது நிற்றலும், அவற்றில் சத்தியவுணர்ச்சி கொள்ளாமல் விடுதலும் வேண்டும்,' என்றார். அங்ஙனமே அவர் ஆசாரங்களையும் விகற்பங்களையும் ஒதுக்கி, அனைத்திலும் அந்தர்க்கதமான உண்மையை அடைந்து, அருள் ஒளியை, சித் அனுபவத்தை, அருட்பெருஞ்ஜோதி அநுபவத்தைப் பெற்றார். இதை சுத்த சத்தியம், சுத்த மெய்யறிவு, பொதுவுண்மை என்றார். அங்ஙனமே உபநிடதங்களும் ஆத்மானுபவம் ஆத்ம வித்தை, ஆத்ம அறிவிலிருந்து கிட்டுகிறது என்று சாற்றுகின்றன.

இறைவனை ஜோதியாய் நம் முந்திய சமயக்குரவர்கள் உணர்ந்திருந்தனர். 'திருவையாறகலாத செம்பொற் சோதி' என்றும், 'மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்,' என்றும் பாடினார் அப்பர். 'சோதியே, சுடரே, சூழொளி விளக்கே,' என்றும், 'கேழில் பரஞ்சோதி, கேழில் பரங்கருணை,' என்றும் பாடினார் மாணிக்க வாசகர். (இந்தக் கடைசி வரியில், 'அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை' என்ற வள்ளலாரின் இரு பொருள்களும் இருக்கின்றன.) அருணகிரிநாதர், 'சோதி உணர்கின்ற வாழ்வு சிவமென்ற சோகமது தந்து எனை ஆள்வாய்' என்ற தம் விண்ணப்பத்தில் 'சோதி'யுடன் 'ஸோஹம்' (அவனே நான்) என்ற உபநிடத மகாவாக்கியத்தையும், 'சிவம்' என்ற உருவ தெய்வத்தையும் சேர்த்திருக்கிறார். தாயுமானவர், 'சுத்த நிர்க்குணமான பரதெய்வமே பரஞ்சோதியே சுகவாரியே,' என்று பாடினார்.

வள்ளலார் இறைவனைக் கலப்பில்லாத தனிப் பெரும் ஜோதியாகக் கண்டார். இந்தப் பூரண ஞானத்தை நாம் காயத்திரி மந்திரத்தில் காணலாம். இந்த மந்திரம் ரிக் வேதத்தில் அருளப்பட்டிருக்கிறது. இதன் இருபத்தி நான்கு அட்சரங்களில் வேத சாரமே அடங்கியுள்ளது என்பது ஐதிகம். இது ஆன்ம விசாரத்திற்கு உகந்தது.

1867 டிஸம்பர் மாதத்தில் அடிகள் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள ஆடூரைச் சேர்ந்த சபாபதி சிவாசாரியார் என்னும் பத்தொன்பது வயதுள்ள இளைஞனைச் சந்தித்தார். 1869 மே மாதத்தில் சிவாசாரியார் வடலூருக்கு வந்து, இறுதி வரை அங்கேயே தங்கினர். பிறகு அவர் சத்திய ஞான சபையின் முதற் பூசகர் ஆனர். அவர் அடிகளை காயத்திரி மந்திரத்தின் பொருளை எடுத்துரைக்க வேண்டவும், அடிகள் அங்ஙனமே செய்தனர். இந்தச் செய்தி சன்மார்க்க முன்னேற்றக் கழகத்தின் சரித்திரக் குறிப்புகளில் அடங்கியிருக்கிறது. சமரச சுத்த சன்மார்க்கத் திருநெறிக் குறிப்புகளில் 105—ம் குறிப்பு அடிகளின் காயத்திரி விளக்கத்தைப் பற்றியது. அதில் அடிகள், 'காயத்திரி மந்திரம் திரிமுர்த்தி ஸ்வரூப மாதலால், இதற்கு அதீதமான பிரமானுபவத்தைப் பெறலாம்,' என்று கூறியிருக்கிறர்கள்.

ரிக் வேத மந்திரமாகிய காயத்திரி, சூரிய காயத்திரி என்றும் பிரம்ம காயத்திரி என்றும் சொல்லப் படுகிறது. இதற்கு இருதரப் பொருள்கள் — கீழ் நிலையிலும் மேல் நிலையிலுமாக இருக்கின்றன. முதற்பொருள் இரண்டாவதை விளக்கும் வகையில் அமைந்திருக்கிறது. முதற் பொருள் புறவுலக விளக்கம். இரண்டாம் பொருள் ஆன்ம விளக்கம். இவ்விரு பொருள்கள் பின்வருமாறு:

1. **சுயப் பிரகாசமாய், அனைய உலகங்களையும் அனைய ஜீவன்களையும் தூண்டி உயிரூட்டும் சூரியனின் மேலான ஒளியைத் தியானிப் போமாக.**

2. **சுய ஜோதியாய் ஜகத்தையும் ஜீவன்களையும் தூண்டி, சத் (சுத்த உயிரறிவு) என இயங்கும்**

ஆண்டவனின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.

புறத்தில் அல்லது பௌதிக உலகில் உயிரெழுப்பி வியாபிக்கும் சூரியனுக்கு ஒப்ப, அகத்தில் உயிரறிவு கொடுத்து உள்ளே வியாபிக்கும் ஆத்ம ஜோதியை அனுபூதியில் அறிவதே சாதகனின் லட்சியம், நிறைஞானியின் ஆனந்த அனுபவம். நினைவு, கனவு, (கனவில்லா) தூக்கம், இம்மூன்று நிலைகளிலுமே நிலைத்து நிற்கும் 'சத்' என்னும் அறிவு நிலையே, பிரக்கினையே, அந்தர்யாமியின் அல்லது அந்தராத்மாவின் விளக்கம், அதுவே ஆத்ம ஒளி, ஆத்ம ஜோதி, இது உபநிஷத்துகளின் உபதேசம்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் மூன்றும் அத்தியாயம் ஏழாம் பிராம்மணத்தில் உள்ள பின்வரும் வாக்கியங்கள் காயத்திரி மந்திரத்தின் விரிவைக் காட்டுகின்றன:

எவன் சூரியனில் உறைகின்றானோ, சூரியனுக்குள் வியாபித்திருக்கின்றானோ, எவனை சூரியன் அறியானோ, எவனுக்கு சூரியன் தேகமோ, எவன் சூரியனை உள்ளிருந்து ஆளுகின்றானோ, அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.

எவன் சந்திர தாரகைகளில் உறைகின்றானோ, சந்திர தாரகைக்குள் வியாபித்திருக்கின்றானோ, எவனை சந்திர தாரகைகள் அறியாதனவோ, எவனுக்கு சந்திர தாரகைகள் தேகமோ, எவன் சந்திர தாரகைகளை உள்ளிருந்து ஆளுகிறானோ, அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.

எவன் தமஸில் (இருட்டில்) உறைகின்றானோ, தமஸுக்குள் வியாபித்திருக்கின்றானோ, எவனை தமஸ் அறியாதோ, எவனுக்கு தமஸ் தேகமோ, எவன் தமஸை உள்ளிருந்து ஆளுகிறானோ, அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.

எவன் தேஜஸில் (ஒளியில்) உறைகின்றானோ, தேஜஸுக்குள் வியாபித்திருக்கின்றானோ, எவனை

***தேஜஸ் அறியாதோ, எவனுக்கு தேஜஸ் தேகமோ, எவன் தேஜஸை உள்ளிருந்து ஆளுகிருனே. அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.***

*எவன் எல்லா சீவன்களிலும், உறைகின்ருனே. சீவன்களுக்குள் வியாபித்தி ருக்கின்ருனே, எவனை சீவன்கள் அறியாதனவோ, எவனுக்கு சீவன்கள் தேகமோ, எவன் சீவன்களை உள்ளிருந்து ஆளுகிருனே, அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.*

*எவன் மனததில் உறைகின்ருனே, மனத்திற்குள் வியாபித்திருக்கின்ருனே, எவனை மனது அறியாதோ, எவனுக்கு மனது தேகமோ, எவன் மனத்தை உள்ளிருந்து ஆளுகிருனே, அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.*

*எவன் புத்தியில் (அறிவில்) உறைகின்ருனே, அறிவிற்குள் வியாபித்திருக்கின்ருனே, எவனை அறிவு அறியாதோ, எவனுக்கு அறிவு தேகமோ, எவன் அறிவை உள்ளிருந்து ஆளுகிருனே, அவனே உன் அகம், அவனே அந்தர்யாமின், அமிருத நிலையான்.*

இக்கருத்து தைத்திரேய உபநிஷத்தில் (III, 10—14—ல்) சுருக்கமாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது:

*மனிதனகத்தே உளனும் சூரியனகத்தே உளனும் ஒருவனே.*

*காயத்திரி மந்திரம் குறிக்கும் சாதனத்தால் அந்த அநுபவம் கிட்டிய ரிஷி ஒருவர் குதூகலிப்பதை ஈசாவாஸ்ய உபநிஷத்தில் (16—ம் சுலோகத்தில்) காண்கிருேம்:*

***உலகைப்பேணும் சூரியனே! வானில் தனி வழி செல்வோனே! உன் கூசும் ஒளியை ஒதுக்குவாய்!***

***உன் கதிர்களைக் கட்டிக் கொள்வாய்! உன் திரு ஒளி உருவை நான் காண அருள்வாய்! உன் உள் உறையும் பரன் நானே!***

இங்ஙனம் புற உலகில் தானே விளங்குபவனாய், உயிரைப் பேணி விளங்க வைக்கும் சூரியனுக்கும், மெய்யுலகில் தானே விளங்குபவனாய், உயிரொளியை ஏற்றி விளங்க வைக்கும் பிரக்ஞைப் பிரகாசமான பிரம்மனுக்கும் உள்ள விளக்கத்தைச் சுருக்கமாய் தைத்திரீய உபநிஷத் தருகிறது:

*ஜீவனுக்கும் அதன் கர்மம் கருத்து அனைத்துக்கும் பிரம்மனே மூலம் என்ற தெளிவுடன் பிரம்மனைத் தியானிக்க வேண்டும். அவனே பல வகைப் பட்ட ஒளி, அனைத்தும் அவனே.*

பிரம்மஞானம் அடைவதற்குரிய தனிச் சாதனம் காயத்திரி மந்திரத் தியானம் என்பது ஐதிகம். புற ஒளியும் அக ஒளியுமாக காயத்திரியை மனத்தில் நிறுத்தித் தியானித்தால் ஆத்ம சொரூபம் ஓங்கும் என்பர்.

கூண்டிற்குள் விளங்கும் ஆத்ம ஜோதியைக் காண அடிகள் ஒரு சாதனம் அருளினர். சின்னஞ்சிறு வயதில் அதை அவர் கையாண்டார். கண்ணாடியில் பிரதிபலிக்கும் தீபமென முருகனைத் தியானித்து, தணிகை முருகனைக் கண்ணாடியில் கண்டார். இறுதிக் காலத்தில் சித்தி வளாகத்திலும் சத்தியஞான சபையிலும் அருட்பெருஞ் ஜோதி தரிசனத்திற்கென ஒரு கண்ணாடியை தீபத்திற்குப் பின் நிறுத்தினர்.

கண்ணாடியில் பிம்பத்தைப் போல் தேகத்தில் பிரம்மனைக் காணலாம் என்று முறையிடுகிறது கடோபநிஷத். இதனால் உடலுள் உறையும் பிரம்மன் ஒரு நிழல், உண்மையல்ல என்றாகாது. நம்முள் அடங்கியிருக்கும் பிரம்மனைக் காண நம் அகத்தில் தூய்மை வேண்டும் என்பதை உணர்த்துகின்றது இந்தத் தத்துவம். இது பற்றிய கடோபநிஷத் வாக்கியம் (வள்ளி 6 சுலோகம் 5) பின் வருமாறு:

> **பிரம்மன் நம் தேகத்தில் கண்ணாடியில் போலும், பித்ரு லோகத்தில் கனவில் போலும், கந்தர்வ லோகத்தில் தண்ணீரில் போலும், பிரம்ம லோகத்தில் சுத்த ஒளி போலும் காட்டிக் கொள்கிறது.**

உடல் ஆத்ம ஒளி உறையும் விளக்காகும் என்ற தத்துவத்தை சுவேதாச்வதர உபநிஷத் (II, 14, 15 சுலோகங்களில்) விளக்குகிறது:

> பளபளப்பான கண்ணாடி, அதன் மேற்படிந்த மாசு நீங்கிவிட்டால் பிரகாசிப்பது போல், தேகமெடுத்த ஆத்மா பிரம்மனைக் கண்டு கொண்டால், சோகம் நீங்கி, பிறவிப்பலன் எய்துகிறது. உடலை ஒரு விளக்கென உணர்ந்து, தன் ஆத்ம இயல்பில் பிரம்மனின் இயல்பை அவன் காண்கிறான். குணங்களற்ற, பிறப்பற்ற, பிரம்மனை இங்ஙனம் அறிந்து, அவன் அனைய தளைகளிலிருந்தும் விடுபடுகிறான்.

இத்தகைய பிரம்மனைஎப்படிச் சொல்லில் பிடிப்பது? அகண்ட தத்துவமாய், அருவாய், குணமற்றதாய், வேற்றுமையற்றதாய், தளையற்றதாய், சூட்சுமமாய், சுயம் பிரகாசமாய், 'நேதி, நேதி' என்று (பிருஹதாரண்யக உபநிஷத் கூறுவது போல், 'அது இல்லை,' 'இது இல்லை,' என்ற சொற்களிலே மாத்திரம்) விளக்கக் கூடிய பிரம்மனை ஞானிகள் சொல் எட்டும் அளவில், 'தேஜஸ்' அல்லது 'ஜோதி' என்றும், 'சச்சிதானந்தம்,' என்றும் வழங்கினர். முதலிரண்டு சொற்கள் மர்மத்தைக் காட்டுகின்றன, அதன் இயல்பை விவரிக்கவில்லை 'அயம் அசரீரோ அம்ருத ப்ராஞ்ஞோ பிரம்மைவ தேஜ ஏவ, என்று முறையிடுகின்றது பிருஹதாரண்யக உபநிஷத். 'பிரம்மன் சுயம் பிரகாசமானவன்', ஜோதிகளுக்குள் ஜோதி, என்று சாற்றுகின்றது முண்டகோபநிஷத். 'சச்சிதானந்தம்' என்னும் மொழி பிரம்மனின் இயல்பை ஒருவாறு இயம்புகிறது. இம்மொழியில் மூன்று சொற்கள் உள்ளன. 'சத்' என்பதை 'இருத்தல்' என்றும், 'சித்' என்பதைத் 'தன்னறிவு' அல்லது

'சைதன்யம்' அல்லது 'பிரஞ்ஞானம்' என்றும், 'ஆனந்தம்' என்பதை 'தன்மய இன்பம்' என்றும் கூறலாம். இம்மூன்றில், 'சித்' என்பது 'சத்'தின் ஏற்ற நிலை; ஆனந்தம் 'சித்'தின் பூரண நிலை. ஆகவே, 'சித்' என்பதை எப்படிக் கிரஹிப்பது? இதை ஜெர்மானிய வேதஞானியான மாக்ஸ் முல்லர், "பிரம்மனை ஒருவிதமாய் கிட்டக் கூடிய வேதாந்த மொழி 'சித்' என்பது. இம் மொழியை 'ஒளி' எனலாம், அது போதாது, 'பிரஞ்ஞான ஒளி' என்று சொல்ல வேண்டும்," என்கிறார். இந்தப் 'பிரஞ்ஞான ஒளி'யை 'அறிவு ஒளி' என்றும் 'தன்னறிவுவொளி' என்றும் சொல்லலாம். முண்டகோபநிஷத் (II, 9, 10—ல்) சாற்றுகிறது:

> உடலின் பொன்னுறை பரகோசத்தில் மாசில்லா, உறுப்பில்லா பிரம்மன் உறைகின்றான். அவனே சுத்தன், அவனே ஜோதிகளுக்குள் ஜோதி. இதனை ஆன்ம ஞானிகள் அறிவர்.
>
> அந்த பிரம்மனின் அறிவு ஒளி இல்லாமல், சூரியனுக்கு ஒளி ஏது? சந்திரதாரகைகளுக்கு ஒளி ஏது? மின்னலுக்கும் அக்கினிக்கும் ஒளி ஏது? பிரம்மப் பிரகாசத்திலிருந்தே இவை ஒளிபெறுகின்றன. பிரம்ம ஒளிபட்டு இவை ஒளி வீசுகின்றன.

காயத்திரியின் சாரத்தை ஞானக் கவி பர்த்ருஹரி ரத்தின சுருக்கமாய் ஒரு சுலோகத்தில் தருகிறார்:

> தேசகால நிர்ணயித்திற்கு அப்பால், அனுபூதியினால் மாத்திரமே அறியக் கூடிய சத்ரூபமான ஜோதிக்கு வணக்கம்.
>
> (நீதி சதகம், சுலோகம் 1)

ராமலிங்க அடிகள் ஆண்டவனை 'ஜோதியுட் ஜோதியுட் ஜோதி' என்றார். அதாவது பிரம்ம ஜோதியைச் சூழ்ந்து அருட் ஜோதியும், அருட் ஜோதியைச் சூழ்ந்து (சீவனின்) ஆன்ம

ஜோதியும் துலங்குகின்றன என்பது பொருள். பிரம்மஜோதியை அடிகள் சுத்த ஜோதி என்றும் சிவ ஜோதி என்றும் 'ஆனந்தக் களிப்பு' பாடலில் கூறுகிருர்:

ஜோதியுட் ஜோதியுட் ஜோதி—சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுட் ஜோதி
ஜோதியுட் ஜோதியுட் ஜோதி

அதாவது, மெய்ப் பொருளான பரஞ்சோதியின் அருள் மூலம் ஜீவாத்மா துலங்குகிறது. 'ஆனந்தக் களிப்பு'ப் பாடலில் அடிகள் மேலும் கூறுகிருர்:

மெய்யொன்று சன்மார்க்க மேதான்— என்றும்
விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீதான்
செய்யன்று தந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி.

இதில் அடிகள் சிவப்பெருமானின் (நடராஜரின்) சின்னங்களான அம்பலம், நடனம், ஜோதி மூன்றையும் குறிப்பிடுகிருர்கள். இந்தக் கடைசி வரியைப் பாடலில் உள்ள இருபத்தி ஒன்பது சரணங்களிலும் அமைத்திருக்கிருர்.

நம் ஐதிகப்படி, சிவ லிங்கத்தில் மேல் நோக்கி நிற்கும் லிங்கம் சிவ ஜோதி, அதைச் சூழ்ந்துள்ள ஆவுடை அருட்ஜோதி, அதைத் தாங்கும் பீடம் ஆன்ம ஜோதி என்று விளம்புகிறது சிவலிங்க வழிபாட்டின் தத்துவம். இதுவே ராமலிங்கரின் அருட்பெருஞ் ஜோதி தத்துவமும் ஆகிறது.

புதுவை ஸ்ரீ அரவிந்தரின் அனுபூதி ராமலிங்க அடிகளின் அனுபூதியாகவே அமைந்திருக்கிறது. ராமலிங்கர் உருவில் இருந்த காலம் 1823 ஆண்டிலிருந்து 1874 ஆண்டு வரை; அரவிந்தர் இருந்த காலம் 1872 முதல் 1950 வரை. ராமலிங்கர் ஒரு மகா சித்தர். மேலும் ஸ்ரீ அரவிந்தர் நீண்ட காலம் தமிழ்நாட்டில் உறைந்ததால், அவர்களுக்கு நம் தொன்மையான சித்தர்களின் தத்துவங்கள் தெரிந்திருக்கும்.

அடிகள் சன்மார்க்க நெறியில் கூறுவது போல், அரவிந்தரும் (தேகம் உட்பட) இறவில்லா சுத்த வாழ்வின் வருகையை எதிர் நோக்கி நிற்கிறார். அவரும் யோகத்தால் சித்திகள் பெறலாம் என்கிறார். சித்தர்களின் தத்துவங்கள் ஒளி வீசும் தமிழ் நாட்டிலிருந்த ஸ்ரீ அரவிந்தர் அவ்வொளியைத் தம் யோகமாய்ச் செய்து கொண்டதில் ஆச்சரியமில்லை. ராமலிங்கர் கூறுவதையே — அதாவது ஆத்மா மாத்திரம் தான் அமர வாழ்வுக்குபாத்தியதை உடையது என்று நிற்காமல், உடலிலும் தெய்வீக இயல்பைப் பரப்பி, இங்கு தெய்வ வாழ்வு வாழக் கூடும் என்று — அரவிந்தர் சொல்லுகிறார். அடிகள் இது அருட்பெருஞ்ஜோதியின் கருணையால், கருணையூறிய மனத்திற்குக் கிட்டும் என்றார். இதை அரவிந்தர், பெருநிலை மனது அல்லது சிவநிலை மனது அல்லது சுத்த மனது, யோகப் பக்குவம்பெற்றபௌதிக மனத்தில் இறங்க, பௌதிக மனமும் சுத்த மனத்தை நோக்கி மேலேறிக் கலக்குகிறது என்றார். ராமலிங்க அடிகள் உட்பட, நம் சித்தர்கள் இதை அனுபவத்தில் கண்டு, நம் தேகமும் தெய்வீகப் பக்குவம் அடையக் கூடும் என்றனர். இத்தத்துவம் சிறு வார்த்தைகள் கொண்ட, அடிகள் அருளிய 'அருட்பெருஞ்ஜோதி தனிப் பெருங்கருணை' என்ற மந்திரத்தில் அடங்கியிருக்கிறது.

# அத்தியாயம் 21

## ராமலிங்க அடிகளின் கவிதை

ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுகிறார். 'மலரைச் சுற்றும் வண்டு தேனைப் பருகும் வரையில் தான் ரீங்காரம் செய்கிறது. தேனைப்பருகத் தொடங்கிய பின் அது அடங்கி விடுகிறது.'

இதுபோல் ஆன்றோர்களும் ஞானிகளும் இறைவனுடன் கலக்கையில் நிஷ்டையின் மௌனம் அடைந்து விடுகின்றனர். தங்கள் அனுபூதிக்கு முன்போ பின்போ தங்கள் மேலீட்டையோ அனுபவத்தையோ அவர்கள் கூற விழைந்தால், அவர்களின் கூற்று பொதுவாக உன்னதக் கவிதையாய் எடுபடுகிறதில்லை. முதலியல்பில் கவிகளாக இருப்பவர்களின் விஷயம் வேறு. அவர்கள் முக்கியமாகத் தங்கள் உந்துதல்களையும் பிரக்கினைகளையும் சொல்வலையில் பிடிக்க முயலுகின்றனர்; தங்கள் மனக் கண்முன் எழும் அருவங்களுக்கு உருக்கொடுத்து சொற் சித்திரங்களில் பிடிக்க முயலுகின்றனர். இங்ஙனம் கூற்று முயற்சியில் சமயச் செல்வர்கள் ஈடுபட்டால், அவர்கள் அநேகமாக சம்பிரதாய சொற் சொரிவுகளில் தம்மை இழந்து விடுகின்றனர்; அல்லது சுலபமாக வரும் திருஷ்டாந்தக் கதைகளில் இறங்கிவிடுகின்றனர். இவற்றில் போதனைச் சிறப்பு இருக்கலாம்; ஆனால் இவை கவின்தயான தனித்தோற்றம் எடுப்பதில்லை. திருஷ்டாந்தக் கதைகளில் ஓரளவு கவிதை கைகூடலாம். ஏசுநாதரின் கதைகளிலும் புத்தரின் கதைகளிலும் கவிதை ரசத்தைக் காண்கிறோம். ஆனால் இது பிழிந்தபின் கிடைக்கும் ரச ரூபத்தில்தான் இருக்கிறது, பரவியில்லை. ஞானாச்சாரியார்களை நாம் ஷேக்ஸ்பியர், வால்மீகி, காளிதாஸன் கோஷ்டியில் சேர்ப்பதில்லை.

ராமலிங்க அடிகள் இந்தப் பொது விதிக்கொரு தனி விலக்கு. அவர் புத்தர், ராமகிருஷ்ணர் போன்ற ஒளி (தெய்வ)

மைந்தர் மாத்திரம் இல்லை. கீட்ஸ், ஷெல்லி பிளேக், டென்னிஸன் போன்ற கவி மைந்தரும் ஆவார். மேலும் அவர் ஒரு மொழியின் உள்ளார்ந்த சாத்தியக் கூறுகளை வெளிப்படுத்தி அதன் எல்லைகளை விரிவு படுத்தியுள்ள கவி வல்லவர்களில் ஒருவர். இந்தியாவிலும் உலகிலும், அடிகள், ஆச்சாரியர்கள், குரவர்கள் பலரின் மொத்தப் படைப்புகளிடையே ஆங்காங்கே ஒரு சில உயர்வான கவிதைகள் தென்படுகின்றனதான். ஆனால் இவை எதுவுமே ராமலிங்கரின் திட்டமிட்டுப் புனையப்படாத, ஆனால் நேர்த்தி துலங்குகிற, கவிதை வளத்திற்கு ஈடாகா என்பது இந்நூலாசிரியரின் கருத்து.

கவிதை சாரம் சொற்களில் பிடிபடாத ஒரு மர்ம உவகை. இது அடிகளின் பாடல்களில் மிகுதியாய் இருக்கிறது. ஆகவே, மதத்திலும் மார்க்கத்திலும் தெய்வத்திலும் வழிபாட்டிலும் நம்பிக்கை இல்லாதவர்கள் கூட அடிகளின் பாடல்களை ரசிக்கலாம். பாடல்களில் எழும் குருவிற்குப் பதிலாகக் கவியை வணங்கலாம். மேலும் சொற்களின் முதற்பொருளான தெய்வ சம்பந்தத்தை விட்டுவிட்டு, இரண்டாம் பொருளான மானிட உறவுகளிலும் உணர்ச்சிகளிலும் ஈடுபடலாம். அடிகளின் மனச் சலனங்களும் கிலேசங்களும் இரங்கல்களும் மேலீடுகளும் நடமாடும் படங்கள்போல் நம்முன் எழுகின்றன. நாம் அவரை நேரே காண்கிறோம். அவருடைய முறையீடுகளை நேரே கேட்கிறோம். இதற்கு மேலும் பல இடங்களில் சாதாரண மக்களின் பொது நிலைகள், மென்மையான, சக்தி கொண்ட மானிட உணர்ச்சிகள் நம் உள்ளத்தைத் தொடுகின்றன. சொற்களின் ஓசையோட்டத்தில் நாம் சொக்கி விடுகிறோம்.

இவ்வாறு கூறும் போது நாம், குரு இல்லாவிடில் கவி இருந்திருக்க மாட்டார் என்பதை உணராமல் இல்லை. 'சுத்த சிவ நிலை' என்னும் பாடலில் அடிகள் கூறுகிறார்:

**கண்ணிற் கலந்தான் கருத்திற்கலந்தானென்**

**எண்ணிற் கலந்தே யிருக்கின்றான் – பண்ணிற்**

கலந்தானென் பாட்டிற்கலந்தா னுயிரிற்
கலந்தான் கருணை கலந்து.

இதில் சிறப்பு என்னவெனில் சுத்த சிவ நிலையுடன் சுத்த கவிதை நிலையும் கலந்திருக்கிறது.

அடிகளின் கவிதைச் சிறப்பைச் சொல்ல, லூயி உன்டர் மேயர் ஆங்கிலக்கவி டென்னிஸனைப் பற்றிக் கூறிய சொற்களைத் திருப்பிச் சொல்லலாம்.

> ஓசையின் நுண்ணிய பாகுபாடுகளையும் வேற்றுமைகளையும், நாதத்தின் மெல்லிய அசைவுகளையும் திரிபுகளையும் உணருவதில் அவருக்கிருந்த விசேஷ புலன் அரிது; அவருடைய கவிதையின் இலகுவான தாரையோட்டமும், அகக்குரல் ஒலியும், ஒலியின் இசையும் மேலும் அரிது.

ஞானக்கவியான ராமலிங்க அடிகள் தற்காலத் தமிழ் கவிதையின் தந்தை. அவருடைய வாரிசுதான் தேசீயக் கவி சுப்பிரமணிய பாரதியார் (1882—1921). ராமலிங்கர்—பாரதியார் ஜோடி காந்தி—நேரு, ராமகிருஷ்ணர்—விவேகானந்தர் ஜோடிகளைப் போன்றது எனலாம். இதிலிருந்து தந்தை—வாரிசு உறவும் இவர்களுடைய தாரதம்மியமும் விளங்கும். அடிகளின் கவிதையிலுள்ள புது முறைகள், புது அமைப்புகள், போக்குகள், இசைகள் முதலிய விவரங்களைக் கவனித்தால், அடிகளின் கவிதையொளியிலே பாரதியார் தம் கவிதை விளக்கை ஏற்றிக் கொண்டார் என்பது புலனாகும். காலஞ் சென்ற, கல்விக் கடலான, திரு. ரா. ஸ்ரீ. தேசிகன் அவர்கள் கூறுகிறார்:

> கவிதைத் துறையில் புதுப்புதுச் சந்தங்களை வகுத்துத் தந்த இராமலிங்க சுவாமிகளைத் தமிழ் உலகம் மறக்கவே முடியாது. இவருடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றியே தமிழர்கள் போற்றும் பாரதியார் பாடுகின்றார் என்பது இவ்விருவர்களுடைய

கவிதைகளை ஆராய்வோர்க்கு நன்கு
புலனாமற் போகாது*.

ராமலிங்க அடிகளின் கவிதைச் சிறப்புக்கு அவருடைய முதற் சீடரான தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்கள் நன்கு உருக் கொடுத்திருக்கிறார்கள்:

வானென்கோ வான்றிரட்டு மமுத மென்கோ
வமுத்திடுமுக் கனியென்கோ மதுர மான
தேனென்கோ தெவிட்டாத சீனி யென்கோ
செங்கரும்பன் சாறென்கோ திரட்சியேன்கோ
வூனென்கோ வூனிருக்கு முயிர்தா னென்கோ
வுயிருடம்பா யோங்குகின்ற வுணர்வ முற்றுந்
தானென்கோ ராமலிங்கத் தலைவா நீசொற்
றனியருட்பா வெனும்பொருளின் றன்மை
தானே.

* அருட்சோலை: ரா.ஸ்ரீ. தேசிகன் எழுதியது. பக்கம் 295. பிரசுரம்: பக்தன் காரியாலயம், 97 வெங்கடரங்கம் பிள்ளைத் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை–5. பிப்ரவரி 1969.

# அத்தியாயம் 22

## அடிகள் வரலாற்றின் கால அட்டவணை

| | | |
|---|---|---|
| 1823 | அக்டோபர் 5 | பிறப்பு. தென்னார்காடு மாவட்டத்தில் சிதம்பர தலத்திற்கு அருகிலுள்ள மருதூரில். |
| 1824 | மார்ச் | சிதம்பரதரிசனம். பெற்றோர்கள் குழந்தைப் பெருமானை தரிசனத்திற்கு இட்டுக் கொண்டு செல்ல, சிதம்பர ரகசியம் அவருடைய மனத்தில் பதிந்து ஒன்றாகி விடுகிறது. |
| | ஏப்ரல் | தந்தை ராமையபிள்ளையின் மரணம். |
| | ஜூன் | செங்கல்பட்டு மாவட்டத்தில், பொன்னேரியில் தாயார் சின்னம்மையின் குடியேற்றம். அங்கிருந்து சீக்கிரமே தம் மூத்த மகன் சபாபதி பிள்ளையுடன் உறைய அவர் சென்னைக்குச் செல்லுகிறார். |
| 1828 | | பிள்ளைப் பெருமான் கல்வி பயிலுவதில் ஊக்கம் காட்டாததால், தமையனாரால் உணவு உடைகள் மறுக்கப் பட்டு, சிறிது காலம் பாலத்துறவியாகிறார். பிறகு அண்ணி பார்வதி அம்மாளால் பேணப் பட்டு, தமையனாராலும் ஏற்றுக் கொள்ளப் படுகிறார். |
| 1832 | | கண்ணாடியில் தணிகை முருகனின் தரிசனம் காண்கிறார். அது தொடங்கி இறைவனாட்சியின் உணர்வில் வாழ்கிறார். பாடல்கள் புனையத் தொடங்குகிறார். அவருடைய முதற் பாடல் சென்னை கந்த கோட்டத்தைப் பற்றிய தெய்வ மணிமாலை. |
| 1835 | | ஞான வாழ்க்கையின் தொடக்கம். திருவொற்றியூர் தியாகப் பெருமானின் |

வழிபாடு. பெருமானையும் வடிவுடைய அம்மையையும் பற்றிய பாடல்கள்.

1849 தொழுவூர் வேலாயுத முதலியார் அடிகளின் மாணவராதல். அவர் பிற்காலத்தில் சென்னை மகாணக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதரதனூர்.

1850 அடிகளின் திருமணம், தமக்கை உண்ணுமுலை அம்மாளின் பெண் தனம்மாளுடன்.

1851 'ஒழிவிலொடுக்கம்' பதிப்பு. இந்நூல் கண்ணுடைய வள்ளல் இயற்றியது. அடிகளின் பதிப்பு சபாபதி முதலியாரால் பிரசுரிக்கப் பட்டது.

1854 அடிகளின் உரைநடை நூல் 'மனுமுறை கண்ட வாசகம்', சாஸ்திர விளக்கச் சங்கத்தார் கேட்டுக் கொண்டபடி, பாளையம் சுப்புராய செட்டியாரால் பிரசுரிக்கப் பட்டது.

1855 'தொண்ட மண்டல சதகம்,' படிக்காசுப் புலவரின் பிரபந்தம், அடிகளின் பதிப்பு, கொண்ணூர் ஐயாசாமி முதலியாரால் பிரசுரிக்கப்பட்டது.

1857 'சின்மயதீபிகை,' ஞானநூல், முத்தைய சுவாமிகள் இயற்றியது. அடிகளின் பதிப்பு, சபாபதி முதலியார், மதுரை முதலியார் இருவர்களால் பிரசுரிக்கப் பட்டது.

1858 அடிகள் சென்னையை விட்டு நீங்கி, வழ/ியில் சீர்காழி, வைத்தீச்வரன் கோயில் முதலிய தலங்களைத் தரிசித்து, கருங்குழிக்கு வருதல். அங்கு உறைந்து கொண்டிருந்த அடிகளின் தமையனூர் பரசுராமபிள்ளை காலமடைதல். அடிகள் கருங்குழியில் வேங்கட ரெட்டியார்

| | | |
|---|---|---|
| | | வீட்டில் உறையத் தொடங்குதல். அங்கிருந்து அடிக்கடி சிதம்பரம்சென்று வழிபடுதல். |
| 1865 | | அடிகள் சமரசவேத சன்மார்க்க சங்கம் நிறுவுதல். |
| 1867 | ஜனவரி 16 | பெண்ணை நதிக் கரையில் திருப்பாதிரிப் புலியூரின் அருகாமையில் பிரம்ம சமாஜத்துப் பிரமுகர் ஸ்ரீதரஸ்வாமி நாயுடுவுடன் விக்கிரக வழிபாடு பற்றிய விவாதம். |
| | பிப்ரவரி 2 | தருமச்சாலை கட்டுவதற்கு வடலூர் மக்கள் அடிகளுக்கு எண்பது காணி (நூற்றி எட்டு ஏக்கர்கள்) நிலம் இனமாகக் கொடுத்தல். |
| | | திருவருட்பாவின் முதல் நான்கு திருமுறைகள் இறுக்கம் ரத்தின முதலியார், புதுவை வேலு முதலியார், சிவானந்தபுரம் செல்வராய முதலியார் ஆகிய மூவரின் முயற்சிகளால், தொழுவூர் வேலாயுத முதலியாரால் பதிப்பக்கப் பட்டு, மயிலை சோமசுந்தர முதலியாரால் பிரசுரிக்கப் படுகிறது. |
| | மே 23 | சத்திய தர்மச்சாலையின் திறப்புவிழா. அச்சமயம் வேங்கட சுப்பதீட்சிதர் அடிகளின் ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் முதற்பாகத்தை வாசிக்கின்றனர். |
| | | அடிகள் சன்மார்க்க போதினி பாடசாலையும் சன்மார்க்க விவேக விருத்தி பத்திரிக்கையும் தொடங்குவதைத் தெரிவிக்கிறார். ஆனால் அவை செயற்படவில்லை. |
| | | அடிகள் கருங்குழியை விட்டு வடலூரில் உறையத் தொடங்குகின்றார். |

| | | |
|---|---|---|
| 1869 | | சபாபதி சிவாச்சாரியார் வடலூருக்கு வந்து அடிகளின் சீடராகிறார். பிறகு அவர் சத்திய ஞான சபையின் முதற் பூசகரானார். அடிகளின் 'அருட்பெருஞ் ஜோதி' அகவலையும் வெளியிட்டார். |
| 1870 | | அடிகள் வடலூரை விட்டு, அருகில் உள்ள மேட்டுக் குப்பத்தில் சித்திவளாக மாளிகையில் உறையத் தொடங்குகின்றார். |
| 1871 | ஜூன் | வடலூரில் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான சபை (சுருக்கப் பெயர், சத்திய ஞான சபை) கட்டத் தொடங்குகிறார். |
| | | அடிகள் மேட்டுக் குப்பத்திலேயே இருந்து கொண்டு சபை கட்டுவதையும் தருமச் சாலையின் விவகாரங்களையும் பார்வையிடுகிறார். படிப்படியாய் இவற்றிலிருந்து விலகிக் கொண்டு, தீவிர யோக சாதனங்களில் முனைகிறார். |
| 1872 | ஜனவரி 11 | அடிகள் சமரசவேத பாடசாலை தொடங்குவதற்கான அறிவிப்பு விடுகிறார். ஆனால் இது உருவாகவில்லை. |
| | | அடிகள் உரைநடையில் நான்கு சன்மார்க்க விண்ணப்பங்கள் செய்து கொள்கிறார். |
| | ஜனவரி 25 | சத்திய ஞான சபையின் தொடக்கம், முதற் பூசவிழா. அடிகள் இது பற்றிய விளம்பரம் வெளியிடுகிறார்கள். |
| | | பல உபதேசங்கள் செய்கின்றனர்; இவை பின்னர் 'திருவருள் மெய்ம்மொழி என்ற தலைப்பில் புத்தகமாக வெளியிடப் படுகின்றன. |
| | மார்ச் 9 | அடிகள் சாலையிலுள்ளோர்க்கு ஒழுக்கக் கட்டளை இடுகிறார். |

| | | |
|---|---|---|
| | ஏப்ரல் 18 | 'அருட்பெருஞ்ஜோதி அகவல்' எழுதப் பெற்று முடிகிறது. |
| | ஜூலை 18 | அடிகள் ஞான சபை வழிபாட்டுக்கான விதிகளை 'ஞான சபை விளக்க விபவப் பத்திரிக்கை' என பிறப்பக்கிறார்கள். |
| | | நிறுவிய நிலையங்களின் பெயர்களிலிருந்து சமய வாசனையுடைய சொற்களை நீக்கி, சன்மார்க்கப் பெரு நெறியைக் குறிக்கும் வகையில் பெயர் மாற்றம் செய்கிறார். அவை பின் வருமாறு: |
| | | 1. முதற்பெயர்: சமரசவேத சன்மார்க்க சங்கம். மாற்றுப்பெயர்: சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் |
| | | 2. முதற்பெயர்: சமரசவேத தருமச் சாலை. மாற்றுப்பெயர்: சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச் சாலை. |
| 1872 | நவம்பர் 25 | சித்தி வளாகத்திலும் தருமச் சாலையிலும் வசிப்பவர்கள் பரஸ்பரம் பழகும் முறைக்கான எச்சரிப்புப் பத்திரிக்கை. |
| 1873 | அக்டோபர் 22 | சன்மார்க்கக் கொடியை சித்தி வளாகத்தில் கட்டுதல். அச்சமயம், அருளிய 'பேருபதேசம்.' அடிகள் ஞானசபையை மூடி விடுகிறார்கள். |
| | நவம்பர் | சித்தி வளாகத்தில் திருவிளக்கு வழிபாடு ஏற்படுத்தி, கதவை மூடிக் கொண்டு, பெரும்பாலும் அறைக்குள்ளேயே இருக்கத் தொடங்குகிறார்கள். |
| 1874 | ஜனவரி 30 | சித்தி அடைதல். |

# இது நல்ல தருணம்

ராகம்: கல்யாணி; அடதாளம்

பல்லவி

இது நல்ல தருணம் — அருள் செய்ய
இது நல்ல தருணம்

அனுபல்லவி

பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய ரேகேளும்
பொய்யேதுஞ் சொல்கிலேன் மெய்யே புகல்கிறேன்
(இது)

சரணங்கள்

மதித்த சமயமத வழக்கெலா மாய்ந்தது
வருணச் சிரமெனு மயக்கமுஞ் சாய்ந்தது
கொதித்த லோகாசாரக் கொதிப்பெல்லாம் ஒழிந்தது
கொலையுங் களவுமற்றப் புலையும் அழிந்தது.
(இது) 1

குறித்த வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று
கொதித்த மனமுருட்டுக் குரங்கு முடங்கிற்று
வெறித்த வெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய் கொடுமாயைச் சந்தையுங் கலைந்தது.
(இது) 2

கோபமுங் காமமுங் குடிகெட்டுப் போயிற்று
கொடியவோ ராங்காரம் பொடிப்பொடி யாயிற்று

தாபமுஞ் சோபமுந் தான்றானே சென்றது
    தத்துவ மெல்லாமென் றன்வச நின்றது.
(இது) 3

கரையா வெனதுமனக் கல்லுங் கரைந்தது
    கலந்து கொளற்கென் கருத்தும் விரைந்தது
புரையா நிலையிலென் புந்தியுந் தங்கிற்று
    பொய்படாக் காதல் ததும்பிமேற் பொங்கிற்று.
(இது) 4

இது நல்ல தருணம் — அருள் செய்ய
இது நல்ல தருணம்.

# பெரு வழக்கு

ராகம்: பைரவி; ரூபக தாளம்

## பல்லவி

இவர்க்கு மெனக்கும்பெரு வழக்கிருக்கின் றது
என்றுந் தீரா வழக்குக் காணடி

## அனுபல்லவி

எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்
இட்டா ரெனக்குமாலை இட்டா ரிதோ வந்தார்.
(இவர்)

## சரணங்கள்

அன்றிதோ வருகின்றே னென்று போனவரங்கே
ஆர்செய்த தடையாலோ இருந்தாரென் கையிற்சங்கை
இன்று தன்கையிற்கொண்டே வந்துநிற் கின்றாரிங்கே
இந்தக் கதவைமூடு இவர்போவ தினியெங்கே.
(இவர்) 1

அவரவ ருலகத்தே அறிந்திலர் தூற்றப் பட்டேன்
அன்றுபோ னவரின்று வந்துநிற்கின்றார் கெட்டேன்
இவர்சூதை யறியறியாதே முன்னம் ஏமாந்து விட்டேன்
இந்தக் கதவைமூடு இனியெங்கும் போகவொட்டேன்.
(இவர்) 2

சின்ன வயதிலென்னைச்சேர்ந்தார்புன் னகையோடு
சென்றார் தயவாலின்று வந்தார் இவர்க்காரீடு
என்னைவிட் டினியிவர் எப்படி போவாரோடு
இந்தக் கதவைமூடு இரட்டைத்தாட் கோலைப்போடு.
(இவர்) 3

இவர்க்கு மெனக்கும்பெரு வழக்கிருக் கின்றது
என்றுந் தீரா வழக்குக் காணடி.

# நடேசர் கீர்த்தனை

ராகம்: காம்போதி; ஆதி தாளம்

## பல்லவி

இன்னந் தயவுவர இலையா — உனக்கென் மீதில்
என்ன வர்மஞ் சொலையா

## சரணங்கள்

அன்னம் பாலிக்குந் தில்லைப் பொன்னம்பலத்தி லாடும்
அரசே — அரசே — அரசே — யென் றலறவும்.
(இன்னந் — 1

சின்னஞ் சிறுவயதி லென்னை யடிமை கொண்ட
சிவமே — சிவமே — சிவமே — யென் றலறவும்.
(இன்னந் — 2

முன்னம் பிழைபொறுத்தா யின்னம் பொறுது விட்டால்
முறையோ — முறையோ — முறையோ — வென் றலறவும்.
(இன்னந் — 3

தன்னை யறியாவென்னை யின்னலுறச் செய்தாயே
தகுமோ — தகுமோ — தகுமோ — யென் றலறவும்.
(இன்னந் — 4

பண்டு மகிழ்ந்தெனையாட் கொண்டு கருணைசெய்த
பர்மே — பரமே — பரமே — யென் றலறவும்.
(இன்னந் — 5

கொண்டு குலம்பேசுவா ருண்டோ வுலகிலெங்கள்
குருவே — குருவே — குருவே — யென் றலறவும்.
(இன்னந் — 6

# வேட்கைக் கண்ணி*

ராகம்: ஆனந்த பைரவி; ஆதி தாளம்

பல்லவி

அணையவாரீ ரென்னை அணையவாரீர்

அணிகிளர்சிற் றம்பலத்தீர் அணைய வாரீர்

சரணங்கள்

இயற்கையுண்மை வடிவினரே அணையவாரீர்

எல்லாஞ்செய் வல்லவரே அணையவாரீர்

இயற்கைவிளக் கத்தவரே அணையவாரீர்

எல்லார்க்கு நல்லவரே அணையவாரீர்

இயற்கையின்ப மானவரே அணையவாரீர்

இறையாமையெலா முடையவரே அணையவாரீர்

இயற்கைநிறை வானவரே அணையவாரீர்

என்னுடைய நாயகரே அணையவாரீர்

(அணைய)

---

* இக் கண்ணியிலுள்ள பதினொன்று சரணங்களில் இங்கு மூன்று தரப் பட்டிருக்கின்றன.

(நெ. 1, 5, மற்றும் 10)

இயற்கை உண்மை என்பது சத்து.

இயற்கை விளக்கம் என்பது சித்து.

இயற்கை இன்பம் என்பது ஆனந்தம்.

சிறுவயதி லெனைவிழைந்தீர் அணையவாரீர்
சித்தசிகா மணியேநீர் அணையவாரீர்
பொறுமைமிக வுடையவரே அணையவாரீர்
பொய்யாத வாசகரே அணையவாரீர்
இறுதிதவிர்த் தாண்டவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர்

(அணைய)

சேரவும்மே லாசைகொண்டே னணையவாரீர்
திருவுளமே யறிந்த தெல்லா மணையவாரீர்
ஆரெனக்கிங் கும்மையல்லா லணையவாரீர்
அயலறியே னுணையும்மே லணையவாரீர்
ஈரகத்தே னல்லவிங்கே அணையவாரீர்
என்னுளைச பொங்குகின்ற தணையவாரீர்
ஏரகத்தே யமர்ந்தருள்வீ ரணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர்

(அணைய)

Printed at The Central Electric Press A12/1 Naraina Indl. Area, Phase-I, New Delhi-110028